உ

தெய்வமே துணை

---

# சிவராத்திரிபுராண

## வசனம்.

இஃது

அஷ்டாவதானம்.

பூவை-கலியாணசுந்தர முதலியாரால்

இயற்றியதை

திரிசிரபுரம்

முனுசாமி முதலியார் குமாரர்,

டி. எம். ஆறுமுக முதலியாரால்

பார்வையிடப்பட்டு.

சென்னை-சூளை

சிறுமணவூர்.

அண்ணாமலை முதலியார்

அவர்களால்தமது

ஆயுர்வேத அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப் பட்டது.

---

1908

இதன் விலை அணா-3.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவராத்திரிபுராணவசனம்

விநாயகர் காப்பு.

ஓங்குமொரு மருப்பானை யுயிர்க்குயிரா
யிருப்பானை யுரகவேந்தன்
றாங்குநெடு நிலத்தானை முகத்தானை
வதைத்தானைச் சயில மானைப்
பாங்குவைத்து மழுத்தானை பரித்தான்றந்
தளித்தானைப் பசும்பொற் றேட்டுப்
பூங்கமலப் பதத்தானைப் பொருவிலைந்து
கரத்தானைப் போற்றல் செய்வாம்.

நூல்.

## சிவராத்திரி யுற்பவச் சருக்கம்.

பூர்வகாலத்தில் தவச்சிரேஷ்டர்களாகிய பலமுனிவோர்கள் பிரமதேவர் கட்டளைப்படி நைமிசாரண்யத்தை யடைந்து தங்கி, ஆணவ விருளாகிய அறையிலிருக்கப்பட்ட அகங்கார மென்னும் வலியகல்லைச்சேதித்து, மனமாகிய பூமியைத்திருத்தி, மௌனமாகிய வித்தை விதைத்து, அன்பாகிய சலத்தைச் சமர்த்திசெய்து, அப்பயிர் வளருகிற வரைக்கும் மாயையென்னும் பட்சிகள்வந்து, கொத்தித்தின்னவிடாமல், சிவத்தியானத்தினல் நிலைத்துக் காத்துச் சிவயோகஞ் செய்து கொண்டிருந்தனர். அக்காலத்தில் பதினெண் புராணங்களைக் குறைவறக் கற்றவரான சூதமாமுனிவரவ்விடத் தெழுந்தருளினர். முனிவர்கள் அவருக்கு ஆசனங்கொடுத்து எழுந்தருளச்செய்து சுவாமீ! பவக்கடலை நீந்தி மோட்சமாகிய கரையேறுவதற்குத் தோணி போன்ற விரதங்களுட் சிறந்தவோர் சைவவிரதத்தை யனுக்கிரகிக்க வேண்டுமென்றனர். சூதமுனிவர் அகமகிழ்ந்து, முகமலர்ந்து, தோன்றி நின்றழியும் வினையோர் விரதங்களைக் கேளாமல் அனாதி முத்த பதியாகிய சிவபெருமான் விரதத்தைக்கேட்க விரும்பினீர்கள், முக்குற்றமுங்கடிந்த முனிவீரர்கள் இது மிகவும் நன்று! நன்று!!

விரதமாவது மனம், பொறி வழிபோகாது நிற்றற்பொருட்டு உணவை விடுத்தேனும், சுருக்கியேனும் மனம், வாக்கு, காயமென்னும் மூன்றினாலுஞ் சிவபெருமானை விதிப்படி மெய்யன்போடு விசேடமாக வழிபடுதல். பெருங்கருணைக்கடலாகிய பரமசிவம் எவரையும் மொருபடித்தாய் ஆளவேண்டுமெனும் பேரன்பு காரணமாகப் பலதொழில்களால் இடர்பட்டு வருத்தமுறும் ஆன்மாக்கள் அப்படித்தியானிக்கச் சத்தியுடைய வரல்லரெனத் தமது சருவஞானத்தால் முற்றுமுணர்ந்து சில விசேடதினங்களிலாவது அவ்வாறு வழிப்பட்டு முறையே பதவிகளெல்லாங்கடந்து இரண்டறக் கலத்தலாகிய நிரதிசயானந்த முத்தியின்பத்தை யவர்கட்குக் கொடுத்தருளும்படி விரதமனுட்டித்தல் வேண்டுமென்று சிவாகமங்களில் திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்றனர்.

பிரமாதி சிவாந்தமாகக்கூறப்பட்ட மூர்த்திகளுள்ளே சிவபிரானின் மேலான மூர்த்தியில்லாத வாறுபோலவும், பிருதிவி தத்துவமீறாகிய தத்துவங்களுள்ளே சிவதத்துவத்தின் மேலான தத்துவமில்லாத வாறுபோலவும், எழுகோடி மகாமந்திரங்களுள்ளே பஞ்சாட்சர மந்திரத்தின் மேலான மந்திரமில்லாத வாறுபோலவும், விரதங்களுள் சிவராத்திரிக்கு மேலானவிரதம் வேதத்தினும், ஆகமத்தினுமில்லை. இதன்மகிமையை முன்னம் இரண்டாவது சம்புவாகிய நந்தியெம்பெருமானுக்குப் பரமசிவன் அனுக்கிரகித்தபடி சொல்லுகின்றேன் கேண்மின் என்றனர்.

பிரமன் படைப்பதும், விண்டுகாப்பதும், குபேரன் அளகாபுரியைப் பெற்றதும், தேவேந்திரன் பொன்னுலகவதி பதியானதும், சந்திரசூரியர்கள் வானத்தில்வாழும் தலைமையினை யுற்றதும் இச்சிவராத்திரி விரதத்தை யனுஷ்டித்ததினாலுண்டானதேயன்றி வேறில்லை. வேதபாரகரர்களாகிய பிராமணருக்குப் பூமி, பொன், பசு, தத்தஞ் செய்யினுஞ், சாத்திரங்களிற் சொல்லப்பட்ட பலவிரதங்களை நோற்றிடினும், அசுவமேதயாகம் நூறுபுரிந்திடினும் கங்கையாதி நதிகளில் முழுகினும், சிவராத்திரிவிரதம் நோற்பதாலுண்டாகும் பயனுக்குச் சமமாகாது. பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர், அனுலோம பிரதிலோம குண்டககோளகர் யாவராயினும், இவ்விரதத்தை நோற்றிடில் இந்திரன், அயன், மால், இமையவர் இறைஞ்சி நின்றேத்தக் கண்ணுதற்கடவுளோ டிரண்டறக்கலத்தில் சத்தியம்! சத்தியம்!! பிரமஹத்தி

ஸ்திரீஹத்தி, சிசுஹத்தி, கோஹத்தி, ஆகிய தீவினையனைத்துஞ் சூரியன்முன் பனிபோல சிவராத்திரி விரதம் நோற்கின் தீரும். வேதங்களிற்சாமம் யாகங்களில் அசுவமேதம், மலைகளில் மேரு, நதிகளில் கங்கை, பூதங்களில், ஆகாயம், தேவர்களில் இந்திரன், முதன்மை பெற்றதுபோல விரதமனைத்தினுஞ் சிவராத்திரியேயதிகம். இவ்விரதத்திற்குச் சமமாக வேறொன்றுண்டென்று சொல்வோர் யோனிவாய்ப்பட்டுப் பிறந்திறந்துழலும் பசுக்களாகிய பிரமன் விண்டுமுதலிய தேவரோடு அனாதிமுத்தசித் துருவாகிய பசுபதியைச்சமப்படுத்தும் மூடரோடு ஒப்பர். அன்புள்ளார்களே யல்லாமல் அன்பில்லார்களுஞ் சிவராத்திரியன்று உணவகற்றி உடல்வருந்தத் துயில் நீக்கிச் சிவார்ச்சனை புரிவரேல், துன்பம் அதிகரித்த பிறவியாகிய சுழற்கடலில் அழுந்தாது மோட்சவீடடைந்து அமலனாகிய நங்கருணாநிதியினிணையடி மலர்க்கீழெழுந் தருளியிருப்பர். இவ்வாறு சூதமுனிவர் சொல்லிய மாத்திரத்து நைமிசாரண்யவாசிகள் ஒன்றுந்தோன்றாது ஆனந்தக்கண்ணீர் ததும்ப மயிர்க்குச் செறிந்து இரண்டு கைகாலுந் தொழுது எங்களையாட்கொள்ளவந்த தெய்வமுனிவரே! இச்சிவராத்திரி விரதம் ஆதியிலுற்பத்தியான விதமும், நோர்கு மியல்பும், அனுக்கிரகிக்க வேண்டுமென முனிவர் விளம்புவராயினர்.

முன்னமொரு காலத்தில் உண்டாகிய மத்திமப் பிரளயத்தில் பிரமமுதல் பிபீலிகை பரியந்தமுள்ள ஆன்மகோடிகளெல்லாம் மாயையிலொடுங்க, மாயை சிற்சத்தியிலொடுங்க, சத்திசிவத்திலொடுங்க சிவமொன்றே தனித்து நின்றது. அக்காலத்து சிவத்தின் வேறாகாது விளங்குந் தாதான்மிய சத்தியெனும் பராசத்தியாராகிய அம்மையார் ஆகமவிதிப்படி அந்திவண்ணனை யருச்சனைபுரிந்தனர். சாமநான்குஞ் சென்றபின் சோமசேகரன் பொற்றாளினைப்பணிந்து நான்வழிபட்ட இன்றைய இராத்திரியை இனிவரும் விண்ணவரும், மண்ணவரும் சிவராத்திரியெனவும், இன்றிரவு முழுதும் அருச்சிக்கின்ற யாவரும் தேவரீர் திருவடியை யடையவும், வரமருளவேண்டுமெனக் கேட்டுக் கொண்டபடி உமையவட்கு உரகபூடணன் கிருபை சுரந்தனர். ஆகலின் அன்றுமுதல் சிவராத்திரியெனப் பெயர்பெற்றது. இஃதன்றி வேறொரு காரணமுமுண்டு. என்தந்தை வியாசர்சொற்படி சொல்லுகின்றேன் கேண்மினெனப் பௌராணிகர் சொல்லத் தொடங்கினர்.

மற்றொரு கற்பத்துப் பிரமாண்ட பிரளய முண்டானபோது அன்னவாகனனும், ஆன்மாக்களும், உலகும் ஒழிந்து இருண்டசத்த மேகங்களுஞ் சமுத்திர நீரையுண்டு, ஆகாய முகட்டளவும் எழும்பி, பொழிந்து, முற்றுஞ்சலமயமாக விருக்கின்றகாலத்து, இமாசல கன்னியோ டெழுந்தருளியிருக்கு மீறிலானுகிய வெம்பெருமான் ஒரு அவசரநிமித்தம் நாம் யாவரு முச்சிவிக்கும்பொருட்டு யோகத்தில் வீற்றிருந்தனர். அப்போது கருடவிஷ்வக் சேனுதி நித்யமுத்தர்களாலே சேவியமானவனுய் விளங்கும் நாராயணமூர்த்தி சராசரமனைத்தினையும் மீளவும் படைத்தற்கெண்ணி வராகவவதாரங் கொண்டு சலத்தில் மூழ்கிக்கிடக்கும் உலகத்தைத்தனது கொம்புகளாற்றூங்கி மேலே யுயர்ச்சியபின் அதசையா வண்ணம் எட்டுத் திக்குகளிலும் அஷ்டகுலகிரிகளைநாட்டி, மத்தியில்மேருவை நிறுத்தி, தனது உந்திக் கமலத்துப் பிரமனைப்பெற்று, அவனைப் பழையபடி ஆன்மாக்களை மீண்டாக்கும்படி கடைக்கணித்துத் திருப்பாற்கடலில் ஆதிசேடன் மீது அறிதுயிலமர்ந்திருந்தனர். அப்பால் நான்முகன் மூன்றுகால மூடந்தெரிந்து ஈரேழுலகுடனே தேவர்கள், கந்தருவர், கிம்புருடர், அரக்கர், இயக்கர் அசுரர், விஞ்சையர், கருடர், பைசாசர், சித்தர், மனுடர், உரகர், முனிவர் முதலியோரை முதலிற்படைத்துப் பஞ்ச பூதங்களி னனுபவந்தெரிந்து முக்குணங்களைத் தழுவி எண்பத்து நான்கு நூறுபிரயோனி பேதங்களாகிய நால்வகைத் தோற்றங்களையும் உற்பவித்துச் சந்திரசூரியரை விளங்கச்செய்து, கலைமகள் சமேதருய் அரியாசனத்தி லெழுந்தருளி யிருக்கின்றபோது, ஒருநாள்நான் உண்டாக்கிய உலகத்தை நோக்கித் தனது கணங்கள் சூழும்படி யெழுந்தருளி விண்மண்முதலிய இடங்களிற் சென்று, பார்த்து, உடல் பூரித்து, என்னைக்காட்டிலும் வேறுமுதல்வனுண்டோ இல்லை இல்லை எனத் தீர்மானித்துச் செறுக்குற்று, திருப்பாற்கடலைச் சமீபிக்கையில் அவன் நித்திரைசெய்யும் ஒருவனைக்கண்டு பொறாமை கொண்டு ஓ! ஓ!! நீ யாவன்? எனதுசிருஷ்டியில் வராதவன் உடனே எழுந்திருவெனச் சொல்லினன். அஃதறிந்த விண்டு துயில்நீங்கிப் பிரமனைநோக்கி நீயாவனிவ்வளவு செருக்குடன் வினவுகின்றனை யென, சொர்க்க மத்திய பாதாளமூன்றுலகங்களையும், அவற்றிலுள்ள யாவையும், உண்டுபண்ணின வேதன்நான் என்றான். இதைக்கேட்ட நாரணர் சீ! சீ!! கடல புடைசூழ்ந்த உலகத்தினையும் அஷ்டதிக்குகளையும் உன்னையுஞ் சிருஷ்டித்தவன் நானேயென்றனன். அல்ல! அல்ல!! நான்குவேதங்

களும், என்னிடை பிறந்தன, மண் புனல் தீ, காற்று, ஆகாயம் என்னினைவிற் படைக்கப்பட்டன. ஆகலின் நானே முதல்வனென்றனன் வேதன் இவ்வாறு இருவர்களும்பேசி மாயாவசத்தர்களாக விஷ்ணுவானவர் அண்டகடாகங்களும் கிடுகிடென வொலிக்கும்படி சாரங்கம் வளைத்து நாணேறிட்டுச் சரமாரிபொழிந்தனர். இவற்றை யெல்லாம் பிரமன் ஒரு தருப்பைப்புல்லால் தடுத்துக்கொண்டு அரவப்படைவிட்டான். அச்சுதன் மயிற்படைவிட்டுக் கெடுத்தான். திசைமுகன் வருணப்படைவிட்டான். கேசவன் தீப்படைவிட்டு ஒழித்தான். விரிஞ்சன் மடங்கற்படை விட்டான். சீதரன் சிம்புட்படைவிட்டு அலைத்தான். பங்கயன் மலைகளை விடுத்தான் நெடியோன் வச்சிரத்தாற் பொடித்தான். இவ்வாறு யுத்தம் செய்து கொண்டிருக்கிற சமயத்து அவர்கள் பூர்வபுண்ணிய மிருந்தவாறு நங்கருணாநிதியாகிய முன்னைப் பழம்பொருட்கும் பழம்பொருளாய்விளங்கும் சிவம் அக்கினிப்பிழம்பாகி இருவருக்குமத்தியில் பிரகாசித்தனர். அவ்வேளை மாசிமாதம் கிருஷ்ணபட்சம் சதுர்தசித் திதியென்று சொல்லுவர். இச்சோதியைக் கண்ணுற்ற இருவரும் பயந்து நடுநடுங்கி மூர்ச்சித்து ஒருவாறுதெளிந்து இவ்வக்கினியின் அடிமுடியைக்கண்டு வருபவரே பெரியர்! பெரியர்!! எனச் சபதஞ்செய்து கொண்டனர். உடனே விண்டுவராக வடிவந்தாங்கிப் பூமியைக்கிண்டி அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் வரையிற்சென்று கொம்பு தேய்ந்தும், முகந்தேய்ந்தும் கால்கள்தேய்ந்தும் திருவடிகாணாது கலங்கித்திரும்பினன். பிரமன் அன்னமாகிப் பூலோகம், புவலோகம், சுவலோகம சனலோகம், தபோலோகம் மகாலோகம், சத்தியலோகம் அளவுஞ்சென்று சிறகொடிந்தும் இறகுதிர்ந்தும் திருமுடியைத்தரிசியாது திரும்பினன் பின்பிருவரும் பரமேஸ்வரனை நோக்கிச் சுவாமீ! சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய யாங்களோ தேவரீரைக்காணக்கருதுவது அழகிது! அழகிது!! ஒரு சிற்றெறும்பு எழுகடலையும் நீந்துவேனென்று சொன்னதுபோலும் எங்களறியாமை சற்றும் தேவரீர் பெருமையைச் சிந்தியாது செய்தகுற்றத்தை க்ஷமித்துத் திருவுருத்தரிசனந் தந்தருளவேண்டுமெனப்பிரார்த்தித்த மாத்திரத்து அடியார்க்கு அருள்சுரக்குமண்ணல் அக்கணமே மான் மழு சதுர்ப்புஜகாளகண்ட திரிநேத்திர சொரூபராய் விளங்க இருவரும் துதிக்கத் தொடங்கினர்.

ஓதியா யனுவா யெண்ணி லுயிர்க்குயிராகி யென்றும்
பேதியாப் பரமதாகிப் பிறப்புட னிறப்பிலாமற்
சோதியா யெழுதாக் கேள்விச் சுருதியின்முடிவா யெங்கட்
காதியா யநாதி யாகுமடிகணின் னடிகள் போற்றி.
விரித்தல கனைத்துமாக்கி வீக்குநாட் சராசரங்கள்
பரித்துள புவனமூன்றும் பாலநேத்திரத் தீயூட்டி
யெரித்து நீறுக்கிப்பூசி யென்பணிந் திலங்கு சூலந்
திரித்துநின்றாடு நின்பொற் சேவடி போற்றி போற்றி.
இலகொளிக் கதிரொன்றாகி யீர்ம்புனர் கும்பந்தோறும்
பலவுருவாகித்தோன்றும் பான்மைபோ லங்கங்காய்நின்
றுலகுயிர்க்கனுயவங்க ளூட்டுவித் தொழிந்தகாலத்
தலகிலாக்கருணைநல்கு மமலனே போற்றி போற்றி.
அருவமா யுருவமாகி யகண்டமா யசலமாகி
யொருபரம்பொருளாய்வண்ண மொப்புட னுயர்வுமின்றி
நிருமலனாகியெங்கு நிறைந்துநீங்காது நிற்குங்
கருதருஞானனந்தக் கருணையங்கடலே போற்றி.
காலனார்வீழத்தாக்குங் கனைகழற் காலாபோற்றி
மூலமாம் பொருளுக்கெல்லா முழுமுதற் பொருளே போற்றி
யாலமுண் டிருண்ட கண்டத் தண்ணலே போற்றி போற்றி.
பொடியெழப் புரமோர் மூன்றும் புன்னகை கோட்டிச் சுட்டாய்
கொடியின்மீ னெழுதுவேளைக் குளவிழி யழலிற் கொன்றாய்
படிமுதக் ககனமீறாய்ப் பரந்தியாம் பரிந்துதேடி
யடிமுடி காண்டற் கெட்டா வத்தனே போற்றி போற்றி.
நிர்வடி வானசெய்ய நெருப்புல வுலவைவானம்
பார்வடி வாகத் தோன்றப் படைத்திட முன்ன மன்னுங்
கார்வடிவானகூந்தற் கவுரியு நீயு மொன்றாய்ப்
பேர்வடி வின்றி நின்ற பிஞ்ஞகா போற்றி போற்றி.

இந்தப்பிரகாரமாக அவனது கல்யாண சுந்தரகுணங்களை யெல்லாம் சொல்லி யேத்திரமாத்திரத்துப் பரமேஸ்வரன் கருணைகூர்ந்து கண்ணனையும் எண்கண்ணனையும் நோக்கி நீவிர் வேண்டும வரகங் ளைக்கேண்மினென, தேவரீர் அக்கினிப்பிழம்பாய் நின்றபோது எங் களுடைய அத்திரசத்திரங்கள் விளக்கிற்பட்ட விட்டிலைப்போலச் சாம்பலாயின, அவையாவும் நாங்கள் மறுபடியும் பெறவும் ஏழை யேம்படைத்தல், காத்தல், தொழில்கள் நிலைபெறவும், அருள் புரியு

மாறு திருவருள் செய்யவேண்டுமென்றனர். அவ்வாறே கடைக் கணித்துச் சொல்வாராயினர். உங்கள் மத்தியில் நாமெழுந்தருளிய இவ்விராத்திரி சிவராத்திரியாம். இம்மாதத்துக் கிருஷ்ணபட்சத்துச் சதுர்த்தசி திதியில் யாவரேனும் நம்மைப்பூசிக்கின் முத்திநலம் ஈவோம். பூர்வத்தில் அம்பிகை பூசைசெய்ததின் மிஃதே யெனச் சொல்லித் திருவுருக்கரந்தனர். அதுதொட்டு முகுந்தன் இவ்விரதம் நோற்று இரட்சகத் தொழிலைப்பெற்று, இராக்கதர்களை யழித்து, இலக்குமியைமணந்து புருடோத்தமனென்ன விளங்குகின்றனன். நான்முகன் இந்நோன்பு நோற்றுச் சிருட்டித்தொழிலைப் பெற்று, வேதவுணர்ச்சியுற்றுக் கலைமகளோடு வாழ்ந்துவருகின்றனன் என்று சனகாதிமுனிவர்கள் கேட்பச்சூதமுனிவர் நிகழ்ந்த சரித்திரத்தை விரித்தெடுத்துச் சொல்லினர்.

சிவராத்திரி யுற்பவச்சருக்கம் முற்றிற்று.

## சிவராத்திரி மான்மிய சருக்கம்.

இவ்வாறு சொல்லிய பெரியோனை முனிவர்கள் நோக்கிச் சுவாமிகாள்! வேதாகமங்கள் கூறும் இச்சிவவிரதத்தினை நோற்றிடு மடைவும், அக்காலத்து அரன்றருளில் மலரிட் டருச்சனைபுரியும் பரிசும், விரித்துரைத்திடுதல் வேண்டுமென் றிரப்ப வியாசபுத்திரர் விளம்புவராயினர். முன்னம் மாசிமாதத்துச் சிவராத்திரி விரதத்தைச்சொன்னேம். அதனுடன் இன்ன மைந்துள அவையாவையெனின்? சோமவாரமுதயங் தொடங்கி இரவு முடியுமளவும் பௌர்ணமீ யிருந்திடில் அற்றையநாள்யோக சிவராத்திரியாகும். அன்றியும் அமரபட்சம் சதுர்த்தசி, சோமவாரமிரவில் நான்குசாமமு மிருந்திடி லதனையும் ஆகமங்கள் யோகசிவராத்திரி யென்றே புகலும். கடைச்சாமத்தி லரைநாழிகைநேர மமாவாசியிருக்கினும் அந்நேரம் சதுர்த்தசி யிருக்கினும் சிவராத்திரியெனக்கொள்ளல்வேண்டும். இவ்விராத்திரி மற்றவைவரைக்காட்டினும் கோடிபலனதிகமாம். வருடந்தோறும் அமரபட்சம் பூர்வ பட்சங்களில் வரும் இருபத்துநாலு சதுர்த்தசியிலும் நோற்பதுவழக்கமாம். இதற்கு நித்திய சிவராத்திரி யெனற்பாலது.

மாசிமாதம் அமரபட்சம் சதுர்த்தசியிலும், பங்குனிமாதம் பூர்வபட்சம திரிதியையிலும், சித்திரைமாதம் அமரபட்சம் அஷ்டமியிலும் வைகாசிமாதம் பூர்வபட்சம் அஷ்டமியிலும், ஆனிமாதம் பூர்வ

பட்சம் சதுர்த்தசியிலும், ஆடிமாதம் அமரபட்சம் பஞ்சமியிலும் ஆவணிமாதம் பூர்வபட்சம் அஷ்டமியிலும், புரட்டாசிமாதம் பூர்வ பட்சம் திரயோதசியிலும், ஐப்பசிமாதம் பூர்வபட்சம் துவாதசியிலும், கார்த்திகைமாதம் பூர்வபட்சம் சத்தமியிலும், அமரபட்சம் அஷ்டமியிலும் மார்கழிமாதம் இரண்டு பட்சத்துவரும் சதுர்த்தசிகளிலும், தைமாதம் பூர்வபட்சம் திரிதியையிலும் வரும் இந்நாட்களில் கண்ணுத லெம்பிரானை யருச்சிக்க வுகந்த சிவராத்திரி யென்றே ஆகமங்களெல்லாங் கட்டளையிடும்.

மார்கழிமாதஞ் சதுர்த்தசிதிதி திருவாதிரை நட்சத்திரத்தன்று மருவில் உத்தமமாம், மாசிமாதத்து அமரபட்சத்தில் சதுர்த்தசிதிதி மங்களவாரம் அல்லது ஆதிவாரம்வரில் மூன்றுகோடி சிவராத்திரிக்குச் சமமாம். மாசியில் பிரமனும், பங்குனியிற் கேசவனும், சித்திரையில் பார்வதியும், வைகாசியில் சூரியனும், ஆனியில் உருத்திரனும் ஆடியில் குமரேசனும் ஆவணியில் சந்திரனும் புரட்டாசியில் ஆதிசேடனும், ஐப்பசியில் இந்திரனும் கார்த்திகையில் சரஸ்வதியும், மார்கழியில் மனோன்மணியும், தையில் இடபதேவனும், சிவராத்திரி விரதநோற்று விரும்பிய வரங்களைப் பெற்றனர்.

மாசி அமரபட்சம்வரும் பிரதமைதொட்டுப் பதின்மூன்றுநாள் தினம் ஒருவேளை புசித்துப்பதினான்காநாள் சதுர்த்தசியன்று நோற்பது பட்சசிவராத்திரியாம். இதற்கிணையான விரதம் புகலுபவர் ஒருவரும் உலகத்திலில்லை. இவ்விதமாகச் சிவராத்திரி ஐந்துவிதமாம். இவ்வைந்தினையும் அனுட்டிக்க ஒரு புருடனுக்கு முடியாதேல், ஒன்றையேனும் முறைவழுவாமல் அன்புடன் நோற்றுவருபவர் அடையும் மோட்சம் அம்ம! அம்ம!! பெரிது! பெரிது!! சுழற்காற்றுமுன் பட்ட பஞ்சினைப்போல் சஞ்சிதவினைகளை யோட்டி மேலான பதவி யடையும் பொருட்டு மாதுபங்கனருட்கடல் குளித்திடுங் குற்றமற்ற குணத்தையுடைய முனிவீர்காள்! இன்னமும் இவ்விரதத்தினைப்பற்றி யெடுத்துரைப்ப தியாதுளது? இமையவராலேயும் அறியவொண்ணா மகிமைகளோடுங்கூடிய இவ்விரதத்தி னியல்பைப் பேதைமானிடர் அறியவல்லவரோ ஒருக்காலுமறியார். களிற்றுருவை போர்த்து உழுவையுரித்துடுத்து, மதியஞ்சூடிய வித்தகனின் சிவவிரதம் உத்தமமென்றும், மத்திமமென்றும், அதமமென்றும் மூன்றுவிதங்களாம்.

சூரியன் அஸ்தமித்துப் பொழுதுவிடியுமளவும் திரயோதசியிருந்து, பின்பு சதுர்த்தசிகூடி, இரவில்லாமல் பகல்முழுதும் இருக்குமேல் உத்தமத்தி லுத்தமமாம். சூரியன் அஸ்தமித்தபின் கூடும் சதுர்த்தசி உத்தமாம். உதயாதியுதயாந்தமாய் பகலிரவுதங்கிநிற்குஞ் சதுர்த்தசி, சூரியன் அஸ்தமிக்குமுன் சேரும் சதுர்த்தசி இரவில் பத்து நாழிகைக்குப் பின் கூடும் சதுர்தப்மத்திமமாம் இரவில் பத்துநாழிகை சதுர்த்தசியிருந்து பின்னர் அமாவாசை பொருந்த அதமச் சிவராத்திரியாம். பதின்மூன்றுந் திதியுடனே சதுர்த்தசி யொருகலை பொருந்தில் அதனையும் சிவராத்திரி யென்றே கொள்ளல்வேண்டும். சதுர்த்தசி சிவரூபம், திரயோதசி சத்திரூபம் இவை யொன்று சேர்ந்து கூடுமிரவு சிவலிங்கரூபமெனப் பெரியோருரைப்பர் அமாவாசி தொட்ட சதுர்த்தசி சவத்திற்குச் சமமாம். அந்நாளிற் பூசை செய்யின் பிரமகத்தி தோடமுண்டாம். விரதமியற்றிய அத்தேசமும் பாழாம் புண்ணியமொழியும். நினைக்கின் உள்ளமும் திடுக்கிட நரகங்களில் மூழ்குவர். ஆனால் இந்நாள் வைதீகர்கட்கும் சந்நியாசிகட்கும் உரியவாம். சைவர்கள் முன்னாள் அனுசரித்தல் வேண்டும். திருவோணங்கூடிய அமாவாசை சம்பந்தப்பட்ட சதுர்த்தசி சந்நியாசிகட்கும் இல்லறத்தார்க்குமாம். இதில் அமாவாசி தோடமில்லை. அர்த்தராத்திரிமுன் சதுர்த்தசி ஒருநாழிகையிருக்கில் முன்னாளையே விரதநாளாகக் கொள்ளல்வேண்டும். அர்த்தராத்திரிக் குப்பின் சதுர்த்தசி ஒருநாழிகை யிருந்திடில் பின்னாளினையே கொள்ளல்வேண்டும். இரண்டிலும் இரந்திடிலும் எந்தபாகத்தி லதிகமுண்டோ அந்த நாளையே அனுசரித்தல்வேண்டும். திரயோதசி, சதுர்த்தசி, அமாவாசை ஆகிய திதித்திரயம் சேர்ந்துவரில் வைதிகருக்கும் சைவருக்கும் சிறந்ததாகும. மற்றையவிராத்திரி நான்காமசாமம அமாவாசி யிருக்குமாயின் சைவருக்கு மிகநன்று சோமவாரச் சதுர்த்தசிக்கு மிந்தப்பிரகாரமமைதல் நன்று இரவில் பதினைந்து கடிகையாமளவு சதுர்த்தசி முற்றினத்திற்கூடி மற்றநாள் பதினைந்துநாழிகை அளவு பௌர்ணமி. பொருந்தில் மறுதினம் சிவபூசைசெய்து முந்தியதினத்திலேயே சிவார்ச்சனை செய்தல் வேண்டும்.

முந்திதியில் ஒருபொழுது உணவுவுண்டு இடைத்திதியில் முழுது முண்ணமல் வீட்டில் துயில்நீத்து நான்கு சாமங்களும் சிவனடியார்க் கன்னமீந்து பின்னம்பாரணம்செய்தல் வேண்டும். சோமவார

சிவராத்திரிக்குச்சதுர்த்தசியிலுண்டு பௌர்ணமியில் வேணிப்பிரானை நான்குசாமங்களும் பூசைசெய்து, பிரதமையிற் பாரணஞ்செய்தல் வேண்டும். இவ்வாறு ஐந்துவகைப்பட்ட சிவராத்திரிக்குள் சதுர்த்தசி சிவராத்திரி வருமாறுல், முன் தினத்தில் திரயோதசியில் ஒருபொழுதுண்டு, மனையாள் தோளைச்சேராது, மற்றநாள் வைகறையில் சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து, சூரியனுதிக்குங் காலையில் அனுட்டானங்களை முடித்துக்கொண்டு, சிவபெருமான் திருவாலயத்தினை வலம்வந்து அட்டாங்க நமஸ்காரஞ்செய்து, உட்பிரவேசித்து, வணங்கி, திராவிட வேதங்களால துதித்துத்திரும்பி, இழிகுலத்தாராகிய புலானுண்ணும் பாவிகளைநெருங்காது, அச்சண்டாளருடன்பேசாது அக்கொடியரைக்காணுது, புண்ணியதீர்த்தஞ் சமீபித்து, விதிவழுவாது நீராடி இரண்டு சுத்தவத்திரமுடுத்து, உச்சியிற் செய்யவேண்டிய கடனை முடித்துச் சந்திரசடாதரனை எழுந்தருளச் செய்யவேண்டிய இடத்தைக் கோமயத்தால் சுத்திசெய்து, நேத்திரங்களால் பொன்னுடை விதானித்து, வாழைகன்னல், நாட்டி, மலர்மாலை தோரணங்கள் வரிசைபடத் தொங்கவிட்டு, அருச்சனைக்குரிய யாவும் சேகரித்துக்கொண்டு, அந்தியிற்புனலாடி, சந்தியாவந்தனமுதலிய முத்துவந்து நம் உடையவரை பீடிகையிலெழுந்தருளப்பண்ணி, பஞ்சேந்திரியங்களை ஒரு வழிப்படுத்தி, சைவாகமமுறைத்தபடி வழுவாது பூசை முடித்தல் வேண்டும்.

முதற்சாமத்தில்கோசலம் தயிர், பால், கோமயம், நெய், ஆகிய பஞ்சகவ்வியத்தாலும், இரண்டாஞ்சாமத்தில் செந்தேன், சருக்கரை தயிர், பால், நெய் ஆகிய பஞ்சாமிர்தத்தாலும், மூன்றுஞ்சாமத்தில் தேனுலும், நான்காஞ்சாமத்தில் கருப்பஞ்சாற்றுலும, முறையே அபிஷேகம் செய்யல்வேண்டுமெனக் காரணவாகமங் கூறும். முதற்சாமத்தில் சந்தனத்தாலும், இரண்டாஞ்சாமத்தில் அகிலாலும், மூன்றுஞ்சாமத்தில் கருப்பூரத்தாலும், நான்காஞ்சாமத்தில் குங்குமத்தாலும், நம்பரமன் திருமேனியில் சன்னித்தல் வேண்டுமென ஆகமம் பேசும் முதற்சாமத்தில் வில்வத்தாலும், இரண்டாஞ் சாமத்தில் தாமரையாலும், மூன்றுஞ்சாமத்தில் சாதிபுட்பத்தாலும், நான்காஞ் சாமத்தில் நந்தியாவர்த்தத்தாலும் நம்பரமனைச் சாத்துகவென்று தந்திராகமஞ் சாற்றும். முதற்சாமத்தில் முண்டகத்தாலும், இரண்டாஞ்சாமத்தில் துளா:த்தாலும், மூன்றுஞ்சாமத்தில், கூவிளத்தாலும், நான்காஞ்சாம

த்தில் நீலோற்பலத்தாலும், நங்கருணைநிதிக்குச் சாத்தல்வேண்டு மெனச் சிந்தியாகமஞ்சொல்லும். வில்வம், நொச்சி, மாவிலங்கை, முட்கிளுவை, வெள்ளி இவை பஞ்சவில்வ மென்னப்படும். இவற்றின் தழைகளை முக்கிளையாகக்கொண்டு நந்தயாளுவின் திருமுடியில் சாத்துவென்னக் காரணவாகமமுரைக்கும். முதற்சாமத்தில் பயிற்றம் பருப்போ டன்னமும், இரண்டாஞ்சாமத்தில் பாயசமும், மூன்றாஞ் சாமத்தில் எள்ளோதனமும், நான்காஞ்சாமத்தில் சுத்தான்னமும், படைத்தல் வேண்டும்.

பின்பு சருவஞ்ஞன், உருத்திரன், சங்கரன், சிவன், சாம்பவன், ஈசானன், உக்கிரேசன், பூதநாதன் என்ற மந்திரமெட்டையுமோதி உறுதியுடன் தூபாதிநிவேதனங்க ளத்தனையு மொழுங்காகச் செய்து இருக்காலும், சாமத்தாலும், எசுராலும், அதர்வணத்தாலு முறையே நான்குசாமமுந் தோத்திரித்து, இருகைகூப்பி, உருகுமனத்துடனிருந்து, உணவு நீங்கித், துயில்நீத்து நான்குசாமமும் அருச்சித்து அருக்கியங்கொடுத்து அடியேனியற்றிய பூசையைத் திருவுளத்தில் நயந்தருள்வாயெனத் துதித்துத் தண்டனிட்டு, சந்நிதானத்து விழுந்தெழுந்து, மற்றுநாள் விடியற்காலத்துத் தீர்த்தமாடி, காலைக் கடன் முடித்து அன்றுஞ் சிவார்ச்சனைமுதலிய செய்து, ஆசிரியனை வணங்கி பிராமணனுக்கு ஆடை, அன்னம், சொர்ணம் ஈந்து அவரனுமதியால் பாரணஞ் செய்திடல்வேண்டும். மற்ற வைகல் பகற்கடன் காலசந்தி முடித்துச் சூரியோதயத்திற்கு ஆறுநாழிகைக்குள் பாரணம்செய்வாராகில் கவளமொன்றிற்கு அனந்தபலன் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு இவ்விரதம் நோற்பார்மாத்திரம் சிவகதியிற் செல்லுதலில்லாமல் அவர்கள் இருபத்துநாலு தலைமுறையுள்ளவர்களும் மோட்சத்தையடைவர். வேதாகமங்கள் சொல்லப்பட்ட மந்திரவிதிப்படி அருச்சிக்கச்சத்தியிலரேல் பரமன் ஐந்தெழுத்தினையுச்சரித்துச்சோடசவுபசாரத்துடன் அன்பாக பூசைசெய்யின் நான்முகன் பூசையினுமேலாம். இத்தகைய சிவராத்திரி விரதஞ் செய்யமாட்டாதவராகிய வையோதிகர், ஸ்திரீகள், நோயர், துயில்மாத்திரம் நீங்கிச் சிவபுராணங்கேட்டுச் செபம்செய்து சிவாலயஞ்சென்று சிவபிரானைச் சேவித்தல் முறைமையாகும் பரமேஸ்வரனை முதற்சாமத்தில் அருச்சித்த பின்பு நீராகிலும், சிறிய பாலாகிலும், பழங்களாகிலும், புசிக்கலாம்

இவற்றுள் நீர் உத்தமம், பால் மத்திமம், பழம் அதமம், தோசை, பிட்டு, வடை, அப்பம் அதமாதமம். பாரணையும் அமாவாசை வருவதற்குமுன் முடித்துப் பிற்பொழுதும் பரமன் சீர்தங்கிய புராணதிகளால் காலங்கழித்துக் சூரியன் அஸ்தமித்தபின் கடன்கழித்துத் துயிலவேண்டு அந்தியன்னம் மொருக்காலு மருந்தலாகாது. பாரண முடிந்தபின் பகற்பொழுதில் நித்திரைசெய்வார் நூறு பிராமணரைக் கொன்ற பழியைப்பெறுவர் வேதவோமஞ் செய்திடில் இது சாந்தியாம். முத்திவிரும்பி சங்கற்பந் தவறாது இருபத்தூராறு ஆண்டு பத்தியுடன் இவ்விரதத்தை நோற்றபின் பசு, பூமி, மாதுமுதலிய தானங்களைச்செய்து விரதவுத்தியபானம் பண்ணுதல் வேண்டும். இவ்விரதத்தை நம்பன் நந்திக் குரைத்திடவுணர்ந்து, சூரியன், காலன், காமன், தேவர், இந்திரன், அக்கினி, குபேரன் முதலியோர் நோற்றுத் தலைமைபெற்றனர். என்று இந்தப்பிரகாரம் சூதமுனிவர் உரைத்தமாத்திரத்து நைமிசாரண்ணியர் நன்றுரைத்தீர் இப்பூமியின்கண் இவ்விரதத்தால் முத்திப் பெற்றவருட் சிலரைக் கட்டளையிடவேண்டுமென, முனிவர் கேண்மின் சொல்லுவோமென இசைப்பாராயினர்.

சிவராத்திரி மான்மியச்சருக்க முற்றிற்று.

---

## சுகுமாரச் சருக்கம்.

உன்னததராதரேந்ர விந்திய வேதண்ட சன்னிதிஹிதமான பரதகண்டத்திலே சிந்துநதி கூலத்திலே அகிலலோக பூஷணமாக விளங்குவதும், சமஸ்தவஸ்து சம்பூரணமாயதும், மகான்கள் வசிக்கப்பெற்றதும், தருமம, நீதி, செல்வம் தழைத்தோங்குவதுமாகிய குஞ்சரபுரியென வொருநகரமுண்டு. இதனை யாண்டுவருபவன் பரிபூரஞ்சையனெனு மொருவரசன். இவன்சகல சுவாமிகுண சம்பன்னனும் சைவ பரிபாலதீரனும், சிவனடிகளையே சிந்திக்குஞ் சிவஞானவள்ளனும், வேதாகமங்களின் முறைமையினில் சற்றும் பிசகாதவனும், மாதர்கள் கற்பினுக்குக் கிஞ்சித்தேனும் பழிவாராது காப்பாற்றிவருபவனும், அன்பென்னும் பயிரினையே தேசமுழுதும் வளரச்செய்பவனுமாகி வாழ்ந்தனன்.

இவ்வரசர்க்கு ஆசி சொல்லிவருபவனும், பிரகஸ்பதி பகவானுக்குச்சமானமானவனும், மானசதருமங்களாகியசத்தியம், க்ஷமை சிவத்தியான, இந்திரியம் நிக்கிரகம் ஆகியவைற்றையும். வாசிகதருமங்களாகிய பஞ்சாட்சரமந்திரம், பஞ்சப்பிரமமனு, புருஷசூக்தம் இவற்றைச் செபித்தல் முதலானவற்றையும் காயிகதருமங்களாகிய சிவலிங்கார்ச்சனம், தீர்த்தயாத்திரை முதலியவற்றையும் யாதானுமோர் விக்கினமின்றி யியற்றிவருபவனுமாகிய வொரு புரோகிதன் நெடுநாளவ்வூரில் இருந்தனன். இப்பிராமணனுக்குந்தீமைகளெல்லாமொருவடிவெடுத்தாலென்னவு, அலைகடலிலுதித்தம் ஆலகாலம்போன்றும், ஒரு குமாரன் பிறந்தனன். இவனுக்குத் தந்தை சுகுமாரனெனப்பெயரிட்டு, ஐந்தாமாண்டில் உபநயன முதலிய முடித்து, உத்தராயணபுண்ணியகாலத்து நல்லநட்சத்திரம்கூடியபுண்ணியதினத்தில் நான்கு வேதங்களையும் சொல்லி வைத்தனன். இவையாவும் பாம்பினுக்கூட்டிய வமுதம்போலும், கமரினிற்சிந்திய பால்போலுமாகி, காமவேற்கணைக்கு இலக்காகின்றான். பின்பு யௌவனதிசையடைந்து ஆயிரங்கோடி மன்மதர்கள்மேனியின் அழகனைத்தும் திரண்டென்றாய் வந்தாலெனச் சுந்தரமுற்று, அத்தேசத்து வாழ்கின்ற கணிகைமாதர்களுடன் போகநுகர்ந்து, அதனால் திருப்தியடையாது, கற்பினையே காவலாகவுடைய மாதர்களின் மனதையு மருட்டித் தழுவி யொரு மதர்த்த காளைவியன வுலாவிவருவான். யாரையு மாமனென்றும் மைத்துனனென்று முறைமைகொண்டாடுவான். மதனனூல் கொக்கோக முதலியவற்றினையே யாகமமெனக் கொள்வான். வாடை இலேபன முதலிய மருந்துகளை மாதர்வசியத்தி நிமித்தஞ் செய்து வருவான்.

பரிபூரண சச்சிதாநந்த பிழம்பாகிய சிவபெருமானை யொருக்காலு நினையான் அவனது திவ்வியமங்கள விக்கிரக ரூபங்களைச் சிலையென்றுஞ் செம்பென்று மேசுவான். நியதியாகச் செய்யவேண்டிய. சந்திபாவந்தன முதலிய மறந்தனன். தருமங்களையுந் துறந்தனன். இவ்வாறு ஒழுகிவந்தவன் நடவடிக்கைகளை அயலார் கண்டு அவனது தந்தைபால் சொல்ல, புரோகிதன் புத்திரனை யொருநாளழைத்து இருததி மற்றுஞ் சிற்சில கல்லூர்களையு மிருக்கச்செய்து, சொல்வானாயினன். எனது தவத்தால்வந்த அருமைப்புத்திரனே? கேட்பையாக பிறர்க்குரித்தாகிய பெண்களைப் புணர்ந்தோர் யுண்ணைமடாய்,

கீர்த்தி, சிநேகம், மேன்மை யொன்றினையு முடையார். பகை, பழி, பாவம், பயம்முதலிய பெறுவார் காமுகர்களெக்காலு மோட்ச சாம்பிராயத்தினையெய்தார். காமமே கொலைகட்கெல்லாங் காரணம், காமமே களவுக்கெல்லாங் காரணம், காமமே கள்ளுண்டற்குங் காரணம், காமமே நரகபூமியைக் காணிபாக்குவதற்குங் காரணம். ஆகலின்மைந்தனேயித்தகையத்தீத்தொழிலை யுடனேவிடுதி விடுதி!! எனப்பற்பலவிதமாகவச்சுகுமாரனுக்குச்சொல்லியுஞ் செவியிற்சற்றுங்கேளானாகிக் கோழிக்கு நல்லவுணவை நாள்தோறும் இடினுமது குப்பையினையே சீத்துத்தின்னுவதுபோலும் தன் வழக்கத்தைவிடாது, பொல்லாருக்கெத்தனைபுத்தி போதிக்கினும் நல்லாருக்குண்டாகிய குணம்வராது போன்று, பழையபடியே நடப்பானாயினான். துற்குணனாகிய வயனைத்தாயுந், தந்தையும் வெறுத்தனர். யாவருந் தொழத்தக்க பிராமணகுலத்திலேபிறந்தும், பழுதுகளையே பலநாளுஞ் செய்வானாகிக், காமக்களஞ்சியனாய், இரவுகளிற் பட்டணங்களிற் பிரவேசித்து வீடுபுகுந்து மதிலேறிக்குதித்தும், தாண்டியும்போய் பிறர்மாதர்களின் கற்பையழித்து வருவானானான். இவ்வாறு நடந்தேறி வருகையில், அவ்வூரிலுள்ளார் தங்கள்தங்கள் மனைவியர்களின் தனங்களிடத்தும், முகங்களிடத்தும், பற்குறி நகக்குறி முதலிய பதிந்திருத்தலைக்கண்டு விசாரித்துக் கற்பழிந்தமை கண்டு, இவ்வாறு செய்துவரும் அச்சுகுமாரனைப் பிடிக்கலாமெனி லொருக்காலு மகப்படான் ஆகலின், அரசனிடத்து முறை யிடுதலே நலமெனச் சூழ்ச்சிசெய்தனர், ஒருநாளப்பட்டணத்துள்ளார் யாவருமொருங்குசேர்ந்து சென்று, ஆகாயத்தினையளவிச் சூரியசந்திரர்களின் ஓட்டத்தினைத்தடுத்து அவர்களைத் தனது சாளரவழியே செல்லச்செய்யு மதிக உன்னதமான வலங்காரங்களை வாய்ந்தமதில்களால் சூழப்பெற்ற அரசமாளிகை நணுகிவாயில் காப்பாரைப்பார்த்துத் தங்கள் வரவைத் தெரிவித்தமாத்திரத்து உடனே வரும்படி யரசனாக்ஞாபித்தனன். கட்டளையைச் சிரமேற்கொண்டு மாளிகைப் பிரவேசித்து இருகைகளையுங் கூப்பித்தாழ்ந்து எழுந்துநின்ற தனது குடிகளை யரசன்நோக்கி யுங்கள் குறையாது உரைமின் இக்கணமே தீர்க்கின்றே னென்றனன் எங்கள் அரசச்செல்வமே? கொடையிற் கன்னனையும், நீதியில் தருமனையும், பலத்தில் வீமனையும், வில்லில்காண்டீபனையும், சாத்திரத்தில் நகுல சகாதேவர்களையும் ஒத்து விளங்காநின்றவனே? நமது பட்டணத்தில்

வசிக்கும் பூசுரகுலேசனாகிய புரோகிதன் குமாரன் சுகுமாரனென்பவன் காமாந்தகனாகி யெங்கள் பததினிமார்களின் கற்பினை யழித்து வருகின்றனனென்றனர் இச்சொற்களைக் கேட்டமாத்திரத்தில் சிவ! சிவ!! என விருகைகளாலு மிருசெவிகளையும் பொத்திக்கொண்டு, கண்களைமூடிப், பெருமூச்செறிந்து, இதழ்கள் துடிப்ப, நானரசாட்சி செய்து வருதல் மிகநன்று! நன்று!! எனச்சிறித்து அதிக கோபாவேசத்தனாய், சேனைக்காவலரையழைத்து, இத்தட்சணஞ்சென்று அப்பிராமண தூர்த்தனைப் பிடித்து வாருங்களென்று இடியிடிந்தாலன்னக் கட்டளையிட்டனன். காவலர் காற்றெனப் பறந்து நாடுமுழுதுந்தேடிப் பிராமணச் சிறுவனைப் பற்றிக்கொணர்ந்து வேந்தன் முன்விட்டனர். அரசன் கண்ணுற்று இந்தச்சண்டாளனை யினியரைக்கணமும் வையாதேயுங்கள், இக்கணமே கொண்டுபோய்ச் சிரச்சேதஞ்செய்துவரக்கடவீர் என்றனன் அப்போது மந்திரி அரசன்முகம் நோக்கி ஐயா? விப்பிரரைக்கோறுதல் நம்மரபுக்கழகன்று அவர்கட்கு இத்தகைய தண்டனை யெங்கனும் விதிக்கக்கண்டதுமில்லை யென்றவுடன், கருங்கண் மாதர்களின் கற்பினைக்கெடுத்த காமுகனைக்காட்டினிடத்தே விட்டுவாருங்கள் என்றனன் சேனைக்காவலர் அங்ஙனமே அத்தேசத் தெல்லையினைத் தாண்டி யோரடவி பால்விட்டு வந்தனர்.

பின்பு சுகுமாரன் வனத்திற்றிரிந்து தனது மார்பினிடத்தணைத்துப் புல்லியமாதர்களை யெல்லாம் நினைந்து, நினைந்துருக, மேலுமேலும் கரும்புவேள் கணைகள் தாக்க, தென்றல்காற்று அக்கினியாய் வீச அரிகளும், கரிகளும, பரிகளும், நரிகளுஞ் சஞ்சரியாநின்ற, காட்டினிடத்துள்ளவோர் ஓடையைச் சமீபித்தனன். அவ்வோடை திரைகளை வீசுதலினாலும், அதனிடத்துச் சங்குகளீன்ற முத்துக்கள் சிந்துதலினாலும், அகலமும் நீளமுங்கண்ணிற் படாமையாலும், சமுத்திரமேயெனச் சொல்லவேண்டியிருந்தது. தாமரையை முகமாகவும நீலோற்பலங்களைக் கண்களாகவும், ஆம்பலினை வாயாகவும், வெண்சங்கினைக் கழுத்தாகவும், கோங்குகளைத் தனங்களாகவும், வராலகளைக்கணைக்காலாகவும், கூர்மங்களைப் புறந்தாளாகவும், ஞெண்டுகளை முழந்தாளாகவும் பெற்று ஓர்பாவையின் உருவத்திக்காட்டினை நிற்கும். அன்றியும் அலையென்கிற சிலையினைவளைத்து வண்டெனுநாணைப்பூட்டி, கமலம் காவியென்னு மம்புகளைக்கோர்த்து அடுத்தவரோடு யுத்தஞ்செய்து நின்றலென்ன வீரனையொத்து விளங்கியது. திரிபதார்

த்த வுண்மையறிந்த சித்தாந்திகளின் மனம்போலத் தெளிந்திருக்கிற
அவ்வோடையின் சமீபத்துத் தட்பமாகக் குளிர்ந்த தென்றல் வீசவும்
தருக்களுடைய நெருக்கத்தால் கதிரவன் கிரணம் புகாது தண்ணெ
ன்றிருக்கவும், காதுக்கினியதாய்ச் சுரும்பினந் தூங்கிசை பாடவும்,
மயிலின நடனமாடவும், குயிலினங்கூவவும், கிளியினம்பேசவும்,
வெகுபின்னலம்பயர்ந்த வத்தீரத்துத் தன்னந்தனியனாச் சுகுமாரனிரு
ந்தனன்.

அவ்வேளையி லவ்விடத்து மத்தகஜ கும்பஸ்தனியும், பூரணசந்
திரவதனையும் கமனீயசுந்தர காத்திரியுமாகிய வோர் புலை மடந்தை
யைக்கண்டு ஆச்சரியமுற்று ஓ! ஓ!! நமக்கு முன்தோன்றுவது தெய்
வப்பெண்ணோ? நாககன்னிகையோ? விஞ்சையர்மாதோ? கைலாசப்
பிரபுவினால் மதனன் வெந்தமையால் விரகதாபமடைந்து வந்த இரதி
யோ, விண்ணைப்பிரிந்து மண்ணையுற்ற மின்னலோ. யாரோ, உடலி
னொளியும், திருமுகச்செவ்வியும், தனங்களின் ரமணீயத்தைப் பார்க்
கக்கண்கள் கூசுகின்றனவே யென்று எண்ணி, எண்ணித் தன்னுள்
ஆலோசிக்கத் தொடங்கினான். இவள் அவ்வுலகத்தவளன்று இவ்வுல
கத்தவளே ஏனெனின், செம்பஞ்சூட்டிய சிற்றடிகள் பூமியில் படிந்
திருக்கின்றன செவ்வரிபடர்ந்த கண்களிமைகொட்டுகின்றன என்று
தீர்மானித்துச் சமீபத்து நெருங்கினான். சந்திரவதனத் தையலும்
மன்மதனே வடிவெடுத்தாலன்னவருஞ் சுகுமாரனைக்கண்டு மயலுற்
றுத் தனது புருவமாகிய சிலையைவளைத்து கண்களாகிய வம்புகளை
அவன்மேற் பிரயோகித்தனள். அவன் விரகக்கடலில் முழுகிச்
சொல்வானாயினான். பெண்ணிற்றிலகமே, நினது விழியென்னும் வே
லால் புண்கொண்ட வென்மார்பினிடத்துப் பொற்றாமரை மொட்டு
போலத் திகழும், நின்தனங்களால் ஒற்றுவிடில் அப்புண் எவ்வாறு
கும். என்செய்வேன்; இப்போதே வுயிர்விடுவேன் இரட்சியும்! இரட்
சியும்! என்று இரந்து இரண்டுகைகளையுங் குவித்துச் சரண்டொழுது
நின்றமாத்திரத்து, அவள் சற்றுக்கிருபைகூர்ந்து, புன்னகை செய்த
னள். சுகுமாரனுடனே யவளிரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு
இருவரு மேகமனமாகி யினியொருவரை யொருவர் தேகமுள்ளள
வும் பிரிவதில்லையெனச் சூள்செய்து கொண்டனர். பின்பு வேதிய
னும் புலைச்சியுந்தங்கட்குச் சமீபத்துப் புன்றசை முடைநாற்றங் கம
ழ்ந்து கொண்டிராநின்ற வொருபுலைப்பாடியுட்பிரவேசித்தனர், அவ்

விடுத்து இளங்கன்றின் மாமிசத்தினை வாயில்கவ்வி யிழுக்கிற நாய்க
ளின் குட்டிகளுடைய கழுத்திற் கயிற்றைக்கட்டிச் சுரைபடர்ந்திருக்
கின்ற சிறுகுடிசைகளில் விளையாடிக் கொண்டிருக்கின்ற சிறுபிள்ளை
களின் காற்சிலம்பு ஒருபுறஞ்சத்திக்கவும், இளங்குழவிகள் பசிக்கிரங்
கியழ, அவர்கட்கு முலைப்பாலருந்தி, தோலாற்சமைத்த எணைகளிற்
றூங்கவிட்டுத் தாலாட்டுமிசை யொருபுறமுண்டாகவும், மாலைக்கா
லங்களில் கள்குடித்துப் பறையடித்துக்களித்துக் கூத்தாடிக்களைத்து
விழுந்து நித்திரைசெய்யும் புருடர்களை யெழுப்புவான் புலரிக்காலத்
திற் கூச்சலிடும் சேவல்களினோசை யொருபாகத்தி லுதிக்கவும், இரு
க்கின்ற வப்புலைச்சேரியில் சுகுமாரனிருந்து, மதுகுடித்துப், புலால்
தின்று, முத்தநகைப் புலைமகளோடு இன்பநுகர்ந்து, களிகூர்ந்து,
வாழ்ந்திருந்தனன். இவர்களுக்குப் பஞ்சமா பாதகங்களேயாகிய
ஐந்து பிள்ளைகளும், இரண்டுபெண்களும் பிறந்தனர். சுகுமாரன் இப்
பிள்ளைகளுடன் வாள், படை, கதை, கணைவில் தாங்கி யடவிகளிற்
சென்று வழிப்போக்கர்களை மறித்து, அடித்துப்பொருள்களை வவ்வி
வருவான். இவனால் கொலையுண்ட அந்தணர்கட்கும், ஸ்திரீகட்கும்
குழவிகட்கும், விருத்தர்கட்கும், துறவிகட்கும் கணக்கில் பிரதிதின
மும் நீர்க்கரைகளிற் கண்ணிவைத்து, அன்றில், ஆந்தை, உள்ளான்,
ஊர்க்குருவி, எண்காற்புள், கவுதாரி, காக்கை, கிளி, குயில், கூகை,
கேகயம், கொக்கு, கோழி, சாதகம், சிச்சிலி, செம்போத்து, நாரை
நிலாமுகி, பருந்து, புறா, மயில், மீன்குத்தி, வானம்பாடி, முதலிய
பட்சிகளைப்பிடித்துத் தின்பான். வேட்டைமேற்சென்றானால்,
ஆடு கவரிமான், காட்டா, நரி, நாய், பசு, பன்றி, மரை, மான்முத
லிய மிருகங்களைக் கொன்று புசிப்பான். இங்ஙனமிவன் வாழ்ந்து
கொண்டிருக்கையில் பூர்வவினைவசத்தால் குட்டமுதலிய பெருநோய்
கள் தேகத்திலுண்டாக மிகமெலிந்து தனது நாயகியாகிய புலைமகளு
மிறந்துவிட மிகப்புலம்பி யனலிலிட்டமெழுகென்னவுருகி, பெட்டை
யைப்பிரிந்த சேவலெனத் துயரக்கடலில் வீழ்ந்து துன்புறுவானாயி
னான். என் கண்மணியே எனதாசை யென்கிற இரவுநீங்க வுதித்த
விண்மணியே வெண்டரளத் தன்மணியே திருப்பாற்கடலிலுதித் விண்
மணியே! தவமுதமென்னப் பிரகாசிக்கு மொண்மணியே உன்னையிழ
ந்துஇனியெப்படி நான் உய்வேன் உய்வேன்! உன்னுடைய பவளத்
தையொத்த வாயினையும், துடியையொத்த யிடையினையும், அரிசிலை

யொத்த கடிதடத்தையும், வேலையொத்தகண்களையும், சங்கையொத்த கழுத்தினையும், எந்த ஜென்மத்திலினி காண்பேன்! காண்பேன்! என்று புலம்பிச் சிற்சிலகாலம் கழித்தனன். பின்பு தனது பெண்களிருவரும் மங்கைப்பருவமுற்றனர். அவர்கள் சந்திரவதனங்களையும், கலசக்கொங்கைகளையும், தொடையணிந்த வேய்த்தோள்களையும், மேனியினொளியினையுங்கண்டு சகிபாதவனாய்ச் சுகுமாரன் இருவரையும் விவாகஞ்செய்து கொண்டனன். இருவரும் இரண்டு மைந்தரைப் பெற்றனர். இந்தப்பிரகாரமாக அவன் தனதுபெண்களாகிய மனைவியரோடும், புத்திரபௌத்ர பௌத்திரர்களோடும், வாழ்ந்து கொண்டிருக்கையில் அத்தேசபத்தரசன் கிரகணபுண்யகாலத்தில்பிராமணோத்தமருக்குக் கஜதானம், அசுவதானம், கோதானம், பூதானம் கன்னிகாதானம், சொர்னதானம்முதலியவை கொடுக்க அவைகளைப் பெற்றுக்கொண்டு வருகிறரெனக் கேள்விப்பட்டுச்சென்று வழிமடக்கி நன்றாய்ப்புடைத்து, திரவியங்களையெல்லாங் கவர்ந்துகொண்டேகினான். பிராமணர்கள் கையொடிந்தும், காலொடிந்தும், தலையொடிந்தும், முறையோ! முறையோ!! வெனக் கூச்சலிட்டு வேந்தன்பால் சென்றனர். அரசன் கண்டவுடன் இதழ்கடித்துக் கரத்துடன் கரத்தை மோதி இவர்களை யிவ்வாறுசெய்த கொடியனையுடனே யிங்கு கொணர்மின் என்று ஆக்ஞாபித்தனன். வாயுவேகத்தினையும் பின்னிடச் செய்யுஞ் சேனைத் தலைவர்களோடி வனமெங்கணுந் தேடுகையில் இதைக்கேள்விப்பட்ட சுகுமாரன் பயந்து தனது மனைவியரோடும் புத்திரரோடு மிரவிலேயே பசைாதங்கடந்து சூரியோதயத்திற்கு முன்பு ஒருபெரிய மலைச்சாரலின் பக்கத்திற் போய்த்தங்கி யங்கே வெகுகாலம் வாழ்ந்து கொண்டிருந்தனன். தூதுவர் காணாது திரும்பினர். இச்சுகுமாரன் வாழுமலைச்சாரலுக்கு அரைக்காதந் தூரத்தில் சிருஷ்டி திதி சங்காரகர்த்திருக மோட்சப்பிரதசர்வக்ய சர்வசக்த ஆனந்தமய வதிரிசிய வேகபரம புருஷனாகிய நம் பரசிவப்பிரபு எழுந்தருளியிருக்கும் நாககரொன்றிருந்தது. அந்நகரில் வசிக்கும் பிரமக்ஷத்திரிய, வைசிய சூத்திரர் முதலியர் தங்கள் தங்கள் பத்தினியரோடு அவ்விடத்திருக்குஞ் சிவகங்கையில் நீராடி, உலர்ந்த இரண்டு வேஷ்டியுடுத்து, பவரோக நிர்மூலவரு மருந்தாகிய விபூதியினையிட்டு உருத்திராட்ச கண்டிகையினைப்பூண்டு, பஞ்சாட்சர தியானஞ்செய்து குண்டலமுதலிய பொற்கலன்களையும் தரித்துப் பிரணவநாயகராகிய சங்கரனுறையும் திருநாகேச்சுரத்திற்சென்று, கெய்த்தீபம் வரிசை

படவேற்றி, கொன்றை, வில்வமுதலிய தூவி, யருச்சனைசெய்து, போற்றி, புவிராஜர் போற்றும் பொன்னடிகளை வாய்ந்த கவிராஜர் கன்ஜீஆலயத்தில் வசிக்குஞ் சுத்த சைவசித்தாந்த பிரசங்கத்தைக் கேட்டுக் கண்துயிலாது சிவசிந்தினையாகவிருந்து மாசிமாதம் பின்சதுர்த்தசியில் வந்த அன்றைய சிவராத்திரி விரதத்தினையாவரும் நோற்றனர். இவ்வுண்மைகளைச் சற்று மறியாத சுகுமாரன் தனது நல்வினையின் பகுதிதன்னைப் பிடரி பிடித்துத்தள்ள தான்தன் மனைவிகட்குச் சூட்ட மலர்கொய்யும்பொருட்டு அத்திருவாலயத்தினுக்குச் சமீபிக்கச்சிவனடியார்களெல்லாம ஹர! ஹர! சிவ! சிவ!! சம்போ!! என்ன நான்காஞ்சாமத்தில் ஆதிசைவர் தீபதட்டேந்தி தீபாராதனை சிவலிங்கப்பெருமானுக்குச் செய்துகொண்டிருந்தனர். இந்த வற்புதக்காட்சியை யச்சுகுமாரன் தரிசித்து வழியேசென்றனன். சிலகால மவனவ்விடத்திலேயே வாழ்ந்து தனது கிழத்தியரோடு இன்ப நுகர்ந்துகொண்டிருந்து, பெரும்பாதக மிவ்வுலகத்தை விட்டொழிந்ததைப் போல வொருநாள் இறந்து விட்டனன்.

உடனே யெமதூதர்கள் அஞ்சனமலையை யொத்த சரீரத்தை யுடையவர்களாய், மிக்க வலிமையினைப் பெற்றவர்களாய், வச்சிரசட்டையினை யுடையவர்களாய், பாவிகளிடத்தே சற்று மிரக்கமில்லாது தீமைசெய்வதற்கு வல்லமையுடையவர்களாய், எமனேவிய கருமங்களில் மனச்சோர் வின்றிச்செல்லுங் கதியுடையவர்களாய், வச்சிர யாக்கையினை யுடையவர்களாய், நெருப்புச்சொரியுங் கண்களையுடையவர்களாய், ஒருகரத்திற் சூலமும், ஒருகரத்திற் பாசமும், உடையவர்களாய், தமமைக்கண்ட வான்மாக்களுடைய வுடம்பினின்று முயிரை பிரிக்கத்தவர்களாய், இன்னோரன்ன விலக்கணங்களை யுடையவர்கள் வந்து, மானொன்றைப் புலிக்கூட்டங்கள் வளைந்துகொண்டது போலச் சுகுமாரனைச் சூழ்ந்துகொண்டு, அடி! அடி!! என்றும், பிடி பிடி! என்றும், இடி! இடி!! ஒடி! ஒடி!! என்றும் ஆர்ப்பரித்து எமபுரங் கொண்டுபோக முயலுகையில், சுத்தசைதன்னிய விமலமூர்த்தியாகிய பரமேசுரன் தன்முன்னிருந்த நந்தியம் பெருமானை நோக்கி நமதுவாயில் வாழ்கின்ற கணங்களையனுப்பி வொரு கணப்பொழுதில் சுகுமாரனைக் கயிலைக்குக் கொண்டுவாருங்களெனத் திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாறே சிவகணத்தலைவர்கள் சென்று எமதூதர்களைக்கண்டு இச்சுகுமாரனை விடுமின்! விடுமின்!! அல்லது உம்யுத்தம் எடுமின்! எடுமின்!! என்றனர். இதைக்கேட்ட தூதுவர், நீவிர்

யாவர் சற்றும் பயமின்றித் தள்ளுகின்றீர் உங்கள் வரலாற்றினை யுரைமின்! உரைமின்!! அல்லதூஉம் சண்டை பிடிமின்! பிடிமின் என்றனர். கேண்மின் தூதுவர்களே, உமது தலைவனாகிய காலனை யிடதுகாலா லுதைத்துக் கால்வாரிக் கொள்ளச்செய்த காலகாலனது கயிலையங் கிரியைக்காக்குங் காவலாளிகள் நாங்களே எனவுரைத்துச் சிலவாளிகளை யவர்கள்மேல் மேகம் பொழிந்தாலென்னப் பிரயோகித்தனர். அதனால் தூதுவர்கள் கரமுறிந்து கால்துணிந்து, சிரமுடைந்துசரமிழந்து, குடர்சரிந்து, சவிகுறைந்து, உரகெறிந்துதென்புலத்திடை யோட்டம்பிடித்தனர். உடனே விஞ்சையர்கள் நரம்புக்கருவித் தடவிச் சுருதிப்பண்கள் பாட, ஆகாயத்தில துந்துமிமுழங்க இரண்டுபக்கங்களில் குடை கொடி சாமரங்கள்வீச, கற்பகமலர்பொழிய, அரம்பையர்கள் பல்லாண்டிசைப்பச், சுரர்கள்போற்ற விமானத்திலேற்றி சுகுமாரனை வெள்ளியங்கிரியினிடத்துக் கொணர்ந்தனர். வந்தவுடன் விமானத்தினின்று மிழிந்து நந்திபால் விடைபெற்று, நமது அம்மையாருடன் திருவோலக்கங் கொண்டருளி யிருக்கும் அப்பனைக் கண்குளிரத்தரிசித்து, ஏசங்கரா, சசிதரா, சடைமுடியா, சதாசிவா, சந்த்ரசேகரா, சம்போசற்றுந் தேவரீரை நினையாத சழக்கனை வலியகாத்த கங்காதரா, கங்காளா, கண்ணுதலோய், கயிலையாளி, கரைமிடற்றோய் காமநாசா, காலகாலா போற்றியென் றிறந்தவுடன் அடியார்க் கருள்சுரக்கு நமதண்ணல் சுகுமாரனைக் கடைக்கணித்து, நீ யின்றுமுதல் நமது திருவுருவினைப்பெற்று. கணங்களுடன் வீற்றிருப்பாயெனக் கட்டளையிட்டருளுதலும் அவ்வாறே யவன் வாழ்ந்திருந்தனன்.

முன்பு சிவகணத்தலைவராற் புடையுண்டு பின்வாங்கிய தூதுவர்கள் நமனிடத்திற்சென்று நடந்த வரலாற்றினைச் சொன்னவுடன் கமனிருவிழிகளிலு நெருப்புப்பொறிகள் கக்கமிக்க கோபித்துத் தனதிரண்டு கைகளையும் புடைத்து என்னுடைய வதிகார மிகநன்று! நன்று! எனச்சிறித்துச் சித்திரகுத்தனை நோக்கி சுகுமாரனேதாவது புண்ணியஞ் செய்திருக்கின்றானா? சொல்வாயென்ன, அவனாய்ந்து பார்த்துச் சுகுமாரன் பிறந்ததுமுதல் இறந்தவரையி லொருதினை யளவும் புண்ணியஞ் செய்ததில்லை யென்றமாத்திரத்தெழுந்து, அஞ்சன் மலையின்மேல் நீலமுகிலுதித்தாலன்ன, வொரு எருமைக்கடாவின்மீதாரோகணித்துக் கயிலாயஞ்சென்று அவ்விடத்து விஷ்ணு, பிரமன்

இந்திரன் முதலிய தேவர்களும், முனிவர்களும், கந்தருவர், விஞ்சையர் பலரும்போற்ற வேத்திரப்படையைக் காத்திற்றுங்கி நந்தியெம்பெருமா னுலாவிவருதலை நமன்கண்டு ஒருபுறத்தி லொதுங்கி நின்று தோத்திரஞ் செய்வானானன்.

"ஆதியீ றிலியா யாணுடன்பெண் ணலியலவா யவையுமாகிச்
சோதிபெறு மருவுருவாய்த் தோற்றுசரா சரமனைத்துந் தோய்ந்துதோயாப்
பாதிமதி தரித்தபேதை பாகனு ளா னேகனுமாய்ப் பசர்தற் கெட்டாப்
பூதிபுனை திருமேனிப் புனிதநின்று மலைத்தாள்கள் போற்றி போற்றி.

இத்தலையா ரமுதமெழ வேண்டுமெனப் பாப்புவடம் யாப்புற்றோங்கன்
மத்தலையா வமரர்கடைந் திடவடவை கருவிலமாய் வந்த தென்னக்
கத்தலைவாரி தியுதிக்குங் கடுவொடுக்கு மணிமிடற்றாய் கருதாருணுண்
முத்தலைவேற் கரனா மறைபுகழு மைந்துமுக முதல்வாபோற்றி.

இந்தப்பிரகாரந் தோத்திரஞ்செய்து சாஷ்டாங்கமாக விழுந்து எழுந்து வாய்பொத்திக் தனதுபாசத்தினையுந் தண்டத்தினையுஞ் சந்நிதானத்துவைத்துத்தாழ்ந்து இனிமே லிவ்வதிகாரம் வேண்டுவதில்லையென்ன, சிவபெருமான் நின்மனத்தி லேதுகுறையுளது சொல்லுமென்றனர். ஏசங்கரா? பிரமன் சிருட்டித் தொழிலையும், விஷ்ணு திதித்தொழிலையுந் தேவரீரேவற்படிசெய்து வருகின்றனர். உலகத்திலுள்ள தீவினைகளையறிந்து அதற்கிணையதண்டம் விதித்திடுவாயென்ன வெளியேற்கு விதித்தனை அவ்வாறே யவரவர்கள் வினைகளைத் தெரிந்து நரகிலூட்டுவித்து வந்தேன். எம்பெருமானே? தேவரீர் பணித்தகட்டளையை யிதுகாறு மீறினேனில்லை. இவ்வண்ணமாக, குஞ்சரபுரியில் பிராமணகுலத்தில் தோன்றி, அறத்தைநீத்து, குலமகளிர்களின் கற்பினையழித்துப் புலைச்சியைமணந்து, அவள்பெற்ற பெண்டுகளையும் புணர்ந்து சாகினிலைதவறி, மாமிசம்புசித்து, வேதியர் முதலினைக்கொன்று, வாழ்ந்த சுகுமாரனென்னுந் தீயோனின் காலமுடிவானதை யறிந்து, தூதுவரையனுப்பி, பாசத்திற் பிணித்துவர அந்த வேளையில் கயிலைக்கணங்களெழுந்தருளி யென்னுடைய கணங்களைப் புடைத்து இந்திராதி தேவர்களெல்லாம் போற்றும்படி நவமணியிழைத்த பொற்றேரிலேற்றித் தேவரீர் சந்நிதானத்துச் சேர்ப்பித்தனர். அந்தோ! அந்தோ!! மழைத்துளிகளைக் கணக்கிடினும், நட்சத்திரக் கூட்டங்களை யெண்ணினும், சமுத்திர தீரத்திலுள்ள மணலிவ்வளவெனமதிக்கினும் இச்சுகுமாரன் நாள்தோறும்செய்ததீமை

களை யெண்ணிக்கையிடலாமோ, இத்தகையோன் குஞ்சிதத்தாண்டவத் திருவடி கீழிருக்கத் தகுமோ ! தகுமோ !! என்றனன். இவற்றைக் கேட்ட சுவாமி, கடைக்கணித்து நமனே கேட்பாயாக, பிராமணன், ஸ்திரீ, பாலர் முதலியோரை வதைக்கினும், மிருகம், பட்சி மச்சமுதலியவற்றைப் புசிக்கினும் தந்தைதாய் குரு சந்நியாசிவேதம் ஆகமமுதலியவற்றை நிந்திக்கினும் நீதிபிறழ்ந்து பொய்சாட்சி சொல்லினும் கன்னிகை கைம்பெண் குருமனைவி அயலார்மனைவி சகோதரி புதல்வி அம்மான்மகள் தூரஸ்திரீ பதிவிரதை நீசஸ்திரீ மிருகங்கள் இவர்களைப்புணர்ந்திடினும் குளம் கிணறு கோயில் மடம் இவற்றை யிடித்திடினும் குதிரை யானை எண்ணெய் நெய் பொன் உபயகோமுகி இவற்றைத் தானம்வாங்கினும பச்சைமரங்களை வெட்டினும் மொக்கைக் கிள்ளினும் ஆலயங்களில் விசர்ச்சனம் செய்யினும் மனமறிய உச்சிட்டமிடினும் திருடினும் கள்ளுண்ணினும் மாமிசம்புசிக்கும் பாவிகள் வீடில் போஜனமருந்தினும் சூரிய சந்திர கிரகணகாலங்களிலும் ஏகாதசி தசமி, அமாவாசை இந்நாளிலும் அன்னமுண்ணினும் இடதுகரத்தா லொருவருக்கொன்றைக் கொடுக்கினும், குதிரை பசுவேதம் உருத்திராக்கமணி மந்திரம் தேவவிக்கிரகம் விபூதி யானை அடி அவுடதம் கன்னிகை எள் நெய் தயிர் பால் எண்ணெய்கள் இவற்றை விற்கினும் அன்போடு சிவராத்திரி விரதம கிரமப்படி நோற்று நாலாஞ்சாமத்தில் சுத்தசைதன்னியத்தின் சத்திருபமாக விளங்கும் சிவலிங்கரூபத்தைத் தரிசிக்கின் அவர்கள் பாவங்கள் எல்லாம் சூரியன்முன் பனிபோலாகும். சுகுமாரனும் அத்தகைய சிவராத்திரியன்று நம்மைத் தரிசித்தாகலின் முத்தியைப் பெற்றனன் என்றனர். காலன் சுவாமீ! சுகுமாரன் தேவரீரைத் தரிசிக்க வேண்டுமென வெண்ணங்கொண்டு தரிசித்தானில்லையே, தசையருந்தி, மதுகுடித்து வெறிகொண்டு, மனைவியர்க்குப் புட்பம்புரிக்கு நிமித்தம் வந்தவிடத் துண்டானதேயன்றி வேறு இல்லையே யென்றனன், ஏகாலனே எவ்வளவு பத்தியில்லாவிடினு முண்டாயினும், தரிசித்த மாத்திரத்து முத்தியடைதல் நிச்சயம் என்றனர், சங்கரா! எனது தூதுவர் ஆன்மாக்களைப் பிடிக்குங்காலத்துத்தேவரீரடியவரென்னுங் குறியாது என்பது திருவாய்மலர்தல் வேண்டுமென்னப் பரமனருளுகின்றனர், கூற்றனே? எனது அடியார்கள் விபூதிசண்ணித்திருப்பர் உருத்திராக்கம் பூண்டிருப்பர், பஞ்சாட்சரம் செபிப்பர் சிவலிங்கபூசைபுரிவர் அடியார் பூசைசெய்வர் சிவாலயதரிசனம் பண்ணுவர்

நந்தவனம் வைப்பர் சிவஸ்தலயாத்திரை கொள்வர் சிவதீர்த்தமாடுவர் சிவராத்திரி விரதம் நோற்பர் சித்தாந்த சாத்திரங்களையும் தேவார திருவாசகங்களையும் படிப்பர பொய்சொல்லார் மாமிசத்தைக் கனவிலுமினியார் கட்குடியார் விபசாரம்பண்ணார் களவாடார் என்றனர். மறலி இதைக்கேட்டு ஆனந்தித்துச்சிவபெருமானிடத்து விடைபெற்றுத் திரும்பிப் பழையபடி செங்கோலோச்சி நடுவனாய் வாழ்ந்தனன் என்று பராசர் பௌத்திரர் நைமிசாரண்யருக்குப் படித்தனர்.

சுகுமாரச்சருக்க முற்றிற்று.

---

## அங்குலச்சருக்கம்.

இன்னு மாசிமாதத்துச் சிவராத்திரியின் பெருமை யொன்று சொல்லுவேன் சைவமுனிவர்களே? கேண்மினென்ன வியாதனைச் சிந்தித்த சூதமுனிவர் பேசத்தொடங்கினர். சூரியசந்திரர்கள் தவழப் பெற்ற மதிற்சூழ்ந்த குபேரன் பட்டணத்தையுஞ் செயங்கொண்ட வளப்பத்தினைவாய்ந்த சாகரபுரத்தை யடுத்த வொரு மலைச்சாரலி லொரு வேடுவனிருந்தான். அவன் தோலினையே யாடையாக வுடையவன் வெண்மையான மாமிசத்தின் முடைநாற்றம் கமழப்பெற்ற வாயினையுடையவன். அநேகமான வேடுவர்கள் தன்னைச் சூழ்ந்திருக்க வாழ்பவன். சாதுகளினிடத்து யானையின் மருப்பினை யாபரணமாகத்தரித்தவன் தேனையுஞ் செந்தினையையும், விளாம்பழத்தினையும் பன்றிமான் முயல்முதலிய மிருகங்களின் மாமிசத்தினையும், மலைநெல்லினையு முணவாகக் கொள்பவன் கோபம்பொருந்திய வக்கினிக்கண்களையுடையவன் மலைபோன்ற தேகத்தினையும் மேகத்தை யொத்த நிறத்தினையு முடையவன் அங்குலனென்னும் பெயரைப் பெற்றவன். இவ்வேடன் பொன்மயமாகிய வம்மலைச்சாரலின் சமீபத்துள்ள வொருபுனத்தில் பசுமை பொருந்திய இலைகளை யாடையாகவுடைய வொருவேடுவச்சியை மணந்து, சேவலுங் கோழியும்போல வாழ்ந்தனர் சிங்கங்களிரண்டு குட்டிகளீன்றாலென்ன இவர்களிரண்டு பெண்களைப் பெற்று அவர்கட்குப் புலியின் நகத்தினைச் சுட்டியாகத்தரித்து பல கரைகளை யணிமணிகளாகவணிந்து மகிழ்ந்திருந்தனர்.

ஒருநாள் வேடன் மரத்தின்தோலை யாடையாகத்தரித்து மான்தோலாகிய செருப்பைக் காலிலிட்டு கருங்கம்பளிக்கயிற்றால் கட்டி அம்பறாத்தூணியை முதுகில் தொங்கவிட்டுப் புலித்தோலுறையில் வைத்திருக்கிற சுரிகையைக் கரத்திற்பிடித்து, தோளில் விற்றரித்து, நாய்க்கூட்டங்களோடு இரக்கமுந் தயையுஞ் சற்றுமில்லாது வேட்டைக்குச்சென்று அனேககோடிமயமான விருட்சங்களால் நெருங்கி ஆயிரங் கிரணங்களோடுகூடிய சூரியனொளி சற்றுமில்லாது காற்று நுழையப் பெறாதிருக்கின்ற வனத்தில் புகுந்தனன். அவ்விடத்துச் செறிந்த மயிரினையு மடிந்த காதுகளையுமுடைய நாய்கள் மிகக்கோபத்துடன் அம்பின் வழியேசென்று காதுகளைநீட்டி குறுமுயற் குட்டிகளைத்துரத்திடு மொருபக்கத்தில், வளைந்தகழுத்து மயிரினையுடைய சிங்கங்கள் யானைகளினுடைய மத்தகங்களைப் பிளந்து கோடுகளைப் பிடுங்கி, கடிக்கிறபோது அதினின்றுஞ் சிந்தியமுத்துக்கள் இரத்தத்தில் துவண்டு மாதுளங்கனியின் விரைகளைப்போல விளங்கு மொருபக்கத்தில் இடிபோன்ற குரலினையும் முறம்போன்ற காதுகளையும் துணையாகிய மருப்புகளையும், தும்பிக்கை யினையுமுடைய யானைகள் துடியடிகளையுடைய தனது கன்றுகள் பின்தொடரச்சென்று நதிகளில்படிந்து விளையாடிக்கூச்சலிடு மொருபக்கத்தில் குகைகளில் நித்திரைசெய்யும் வரிகளையுடைய புலிகள்வீரிட்டக் கூச்சலினைக்கேட்ட பன்றி மரை வரையாடு மான்குலமுதலிய பயந்து ஒதுங்கியொடுங்கு மொருபக்கத்தில் நீண்டவேலையேந்திய சண்முகக்கடவுளின் ஆலயங்களில் பிரகாசிக்கின்ற பல்லாயிரந் தீபமென்னப் பெரிய படங்களையெடுத்துப் பெருமூச்செறிந்து ஆடுஞ்சர்ப்பங்கள் கக்கியமாணிக்கங்கள் பிரகாசித்துக் கொண்டிருப்பன வொருபக்கத்தில் இத்தகைய காட்சிகள் திகழும்வனத்தில் அங்குலனென்னும் வேடன்பட்சிகளைப் பிடிக்குங் கண்ணிகளை யிடங்கடோறும் வைத்து, மிருகங்களைக் கொலைசெய்ய யெந்திரப்பொறிக ளாங்காங்கு புதைத்துச் சூத்திரக்கயிற்றை மரங்களினடியிற்பூட்டி நாய்களையுலாவி அம்புகளைப் பிரயோகித்துக் குறியதடிகளை வீசி காட்டிலுள்ள விலங்குகளையெல்லாங் கலங்கச்செய்து துரத்தலும், இவன் வலைகளிலொன்றுஞ் சிக்காமலோடிப் போயின. இதனால்வேடன் மிக கவலையுற்று நம்முயற்சி யெல்லாம் வீணாயினவேயென்று துக்கித்துப் பசியினாலிளைப்புற்று மேனியிளைத்திட வருஞ்சமயத்துஞ் சூரியன் மேற்கடல் பிரவேசித்தனன். மாமிசந்தின்னு மடையர்களின் மனம்போல விருள்வந்து சூழ்ந்துகொண்

டது. வேடுவனென்றுந் தோன்றுது தனது பெண்டுபிள்ளைகள் பட்டினியால் வருந்துவரேயென வேக்கங்கொண்டு ஆலோசித்து நல்லது இருட்காலத்தில் சலமுண்ண மிருகங்கள் வரும் அப்போது வாளியினாற்கொன்று கிரகிப்போமெனத் தீர்மானித்தனன் ஆயினும் நாம் தனியேயிருக்கின் சிங்கம் புலி முதலிய மிருகங்கள் துன்பஞ்செய்யுமென்று சமீபத்திருந்த வொரு வில்வமரத்திலேறி அம்புகளைத்தடுக்கும் இலைகளை யெல்லாஞ் சரிசையினலறிந்து மரத்தின் கீழேவீசிக்கொண்டு மிருகங்களின்வரவை யெதிர்பார்த்துக்கொண்டிருந்தனன்.

வேதாந்தத் தெளிவாகவிளங்குஞ் சுத்தாத்துவித சைவசித்தாந்த சமயத்தவர்களாகிய சிலமுனி பூர்வத்தில் ஆகமவிதிப்படி பூசை செய்த வொரு சிவலிங்கம் அவ்வில்வமரத்தின் கீழிருந்தது. மரத்தின் மீதிருந்து அவ்வேடன்வீசிய வொவ்வொருவிதமும் நஞ்சிவலிங்கப் பெருமான் திருமுடியின்மீது விழுந்து கொண்டிருந்தது. அன்றைய விரவு மாசிமாதத்துச் சிவராத்திரியாம். இவ்வண்ணமிருக்க இவ்வேடன் மனைவியானவள் தனது நாயகனை நினைந்துகொண்டு காட்டினிடத்தே சென்ற வென்கணவன் இன்னமெய்திலனே என்கொலோ என்கொலோ ! என்று துயில்கொள்ளாது ஏக்கிப்பாளாயினள். என் பிராணநாயகனே துணையின்றி சென்றனையே வாரணம் வதைத்ததோ சிங்கஞ்செகுத்ததோ, உழுவைபொழித்ததோ, கரடிகடித்ததோ, என் செய்வேன் என்செய்வேன் நின் புதல்வர் வெம்பசியால் தவிக்கின்றனரே உன்பிராண நாயகியாகிய நானும் வாடுகின்றனனே எனக்கூக்குரலிட்டுத்தனது இரண்டுகொங்கைகளுங்கண்ணீரால் நனைய அழுது அழுது அயர்ந்திருந்தனள். பாசஞானமும், பசுஞானமுந் திருவருள் ஞானத்தால் மயங்கசிவஞான முதித்ததுபோலும், இருளொலாமொழிய சூரியனுதயமாயினன். வேடன் இராத்திரிமுழுவது மரத்தின்மீது கண்விழித்திருந்து உணவின்றி முயற்சிபலியாது மரத்தினின்று மிறங்கித்தனது மனைவிமக்களென்ன வாயினரோவென வேக்கங்கொண்டு தன்னிருப்பிடம் நோக்கி வருகையில் தன்னை யெதிர்கொண்டுவரும் மனைவியைக்கண்டு தழுவி வீடுசேர்ந்து செந்தினைமாவுடன் வரைத்தேனைக்கூட்டி யுண்டுபன்னாள் வாழ்ந்துகொண்டிருந்தனர். பின்பு அக்குலனுக்கு நரை முதிர்ந்து உடலிற் பலங்கெட்டுப் பிணிகள் மேலிட வருந்தி வொருநாள் உயிர் நீங்கினன்.

அக்கணமே நமன்தூதவர்கள் சூலம்வாளி சிலைதோமரம் உலக்கைவேல், பாசமுதலிய தாங்கிவந்து அந் தலைனப்பற்றினர். பாகத்தால்சுற்றினர், இவ்வாறுசெய்து எமபுரங்கொண்டுபோம் சமையத்து மங்கையைப் பங்கிலுடைய மாலயற்கரியோன் சிலாதரர் புத்திரராகிய நந்தியையழைத்து அங்குலனென்னும் வேடனை எமதூதரின் பாசத்தினின்று நீத்து இமைப்போதி லிவ்விடத்திற்குக் கொண்டுவர கணநாதரை யேவுதியென்ன சிவபெருமான் கட்டளையைச் சிரமேற்கொண்டு நந்தியெம்பெருமானர் ஆக்ஞாபித்தபடி கணத்தலைவர் விரைந்து சென்று தூதுவரைத்தடுக்க அவர்கள் இவனைவிடோம் இவன் மகாபாவி யெனலுஞ் சிற்சில வம்புகளால் நன்ருய் தூதுவரைப் புடைத்துப் பின்வாங்கச்செய்து அறமங்கைய ருகிருந்து வெண்கவரிவீச, வெண்மதிக்குடைகவிய, கந்தருவர்பாட துந்துமிமுழங்க விமானத்திலேற்றி அங்குலனை விமலன்முன் விடுத்தனர். நம்பெருமானவனை நங்கயிலைவாழும் பெருவாழ்வை யளித்தனர்.

சிவகணத் தலைவரால் புடையுண்டு ஒட்டம்பிடித்த எமதூதர் சென்று காலனிடத்து நடந்தசங்கதிகளியாவு மாதியோடந்தமாகச் சொல்லக்கேட்டுச் சமன் உதட்டைக்கடித்துத் தோள்கள் குலுங்கச் சிரித்து எழுந்து கடாவின்மீ தாரோகணித்துக் கயிலைக்குச் சென்றனன். சிவனடியார்கள் மனம்போலச் சுத்தவெண்மை நிறத்தினை வாய்ந்த வெள்ளிமலையில் ஆயிரங்கோடி சூரியனுதித்தாலென்னப் பிரகாசிக்குமண்டபத்தில், பொற்சிங்காசனத்தில், அங்குசபாச மேந்தியும் அறுமீன்காதலனும் அருகிருக்க, அரவணைச் செல்வனும், அன்னவூர்தியும், அயிராவதத்தனும், தங்கள் தங்கள் ஆடைகளை யொருபுற மொதுக்கி வாய்களை இரண்டு கைகளாலும் பொத்தித்தங்கள் குறைபாடுகளை ஒருபால் ஒதுங்கிநின்று தாழ்ந்துகூறவும், நந்தியெம்பெருமான் வேத்திரப்படைதாங்கி யெதிரில் நிற்கவும், நமது அம்மையாரோடு நமது அப்பனுகிய சங்கரன் திருவோலக்கங் கொண்டருளி யிருந்தனர். அச்சமயத்து ஞமன் அடிமேலடிவைத்து மெள்ளச் சென்று ஒருமூலையில் தனியேநின்று இருகரத்தையுஞ் சிரமேற் குவித்து அரனேபோற்றி, அரசேபோற்றி, அனுதிபோற்றி, இறைவபோற்றி, ஈசாபோற்றி, உறவேபோற்றி, ஊழேபோற்றி, எந்தைபோற்றி, ஏகாபோற்றி, ஐயபோற்றி, ஒளியேபோற்றி, ஓர்வேபோற்றி ஔதாரியனே போற்றி போற்றி என்று தோத்திரஞ் செய்தமாத்திரத்துக் கருணைப் பிழம்பாகிய கண்ணுதல் சற்றுக்கடைக்கண்ணை யவன்மீது

சாய்க்க, பிழைத்தேன்! பிழைத்தேன்!! சங்கரா பிழைத்தேன்! இனி யெனக்கென்ன குறையுள்ளது என்றுனந்தங்கொண்டு சொல்வானுயினன்.

இவ்வுலகினைப் படைக்கப் பிரமனுக்குப் பணித்தாய், காக்க விண்டுவுக்கு வகுத்தாய், பொன்னுலகையாள இந்திரற்கு இசைத்தாய் விளக்கஞ்செய்யச் சந்திராதித்தர்கட்குச் சாற்றினய் வாயுவீசப் பவனனுக்குப் பகர்ந்தாய் சலத்தையாள வருணனுக்கு வழங்கினய் யாவர்க்குந் தண்டஞ்செய்ய வடியேற்கு அறைந்தாய், தேவரீரேற் படுத்திய ஆக்கினைபிசகாது நடந்துவருகின்றது. என்பால்மாத்திரம் தவறியது என்னே! என்னே!! இன்றுமுதல் இவ்வதிகாரம் எனக்கு வேண்டுவதில்லை இதோ யெனது சின்னங்களாகிய பாசத்தினையும், தண்டத்தினையும் சந்நிதானத்து வைத்துவிட்டனன். கட்டளைக் கெதிர் பார்க்கின்றேனென்றனன், சண்டனே உனக்கின்றுவந்த தாழ்வென்னே சொல்வாயென்று நம்கருணாநிதி கேட்டலும், நமன் விளம்புவானுனன் சுவாமீ! வனத்தில் கண்ணிகளை வைத்துக் கையிற் கார்முகம்பிடித்து அம்பெய்வி மிருகங்களையெல்லாங் கொன்று பட்சிகளை மாய்த்து அவற்றின் மாமிசங்களைப்புசித்து வாழ்ந்தவேடன் தேவரீர் பதத்தெழுந்தருளினன். அவன் யாகம் வளர்த்ததினனு, சிவகங்கைகளில் நீராடினனு, சிவலிங்கபூசை செய்தனனு புண்ணியத்தலத்து வாழ்ந்தனனு சிவவிரதம் நோற்றனனு, சித்தாந்தந் தெளிந்தனனு யாதின் பொருட்டு இறைமனே யிங்குவந்தனன். அந்தோ! முத்தர்களுக்கு மூர்க்கருக்கும வித்தியாசமென்னே? சமமாகப் பாவிக்கிலுலகங் கவிழ்ந்துவிடுமே இஃதென்னகொள்கை! அடியேன் தூதுவர்களோடி கல்புரிந்து புடைத்து வெருட்டி இவ்வேடனைக் கணங்கள் கொணர்ந்தனர், பாவங்கள் செய்வாரெல்லாஞ் சிவலோகம் வந்துவிடில் நான் யாவரை தண்டஞ்செய்வது அருளுவீரென்றனன். அப்போது நிட்களாதீதபரசிவம் மறலியைநோக்கிச் சொல்லுவார். தென்றிசைக் கோனே? அங்குலமொன்னும் வேடன் முன்னாள் வேட்டைக்குச்சென்று சிவராத்திரியன்று கண்விழித்திருந்து நம்மை வில்வத்தா லருச்சனைசெய்ததால் பாவங்களையெல்லாம் ஒழித்தனன் இவ்வுண்மையை நீயறியாய் கணக்கில்வல்ல நினது சித்திரகுத்தனு மறியானென்றனர் சுவாமீவேடன் சிவராத்திரியென்பது மறிந்தானில்லை புலிமுதலிய மிருகங்கட்குப் பயந்து மரமேறினன். மான்முதலிய மிருகங்களைக் கொல்லும்பொருட்டு அம்பேவினல் தடுக்குமென்று

வில்வவிலைகளைப் பறித்துக் கீழெறிந்து கொண்டிருந்தனன். அம்மர ந்தின்கீழ் சிவலிங்கப் பெருமானிருப்பதுந் தெரியான். தெரிந்து யாதொன்று மவன் செய்யவில்லையேயென்று சொன்னவுடன் அந்த அவ்வேடனறியாது செய்ததால் பதமுத்தி நல்கினோம் அறிந்து செய் திருப்பனேல் அவன்நாமேயாவன் என்றறிதி இமாசலபுத்திரிகோற்ற விவ்விரதத்தின் பெருமையார் கணிக்கவல்லார். கைவிரல் கண்ணில் பட்டால் செய்வதென்ன கவலைதீர்த்து நின்முத்திரைகளை யெடுத்துக் கொண்டு தூதுவருடன் நகர்க்கேகுவாயென விடையளித்தனுப்பி னர். முத்தலைப் படைகொண்ட காலன்முதல்வனை முறைப்படிபணி ந்து தாழ்ந்து சித்தந்தெளிந்து தென்புலத்தேகினான்.

அங்குலன் கணங்கட்கெல்லாந் தலைமையினைப் பெற்று அங்கிரு ந்து இந்திரநாட்டைச்சென்று தேவர்கள்வணங்க அவ்விடத்து இன் பங்களையெல்லாம் நுகர்ந்து நித்தியசூரிகள் சூழ திருமாமணி மண்ட பத்தி லெழுந்தருளியிருக்குங் கண்ணனுலகஞ் சேர்ந்து அவரெதிர் கொள்ள சத்தியலோபமடைந்து பிரமன் முதலியோர் தாழ நம் வெ ள்ளியங்கிரியினி லெழுந்தருளி யின்புற்றிருந்தனன் என்று சூதமுனி வரோத மாதவர்கள் ஆனந்தக்கொண்டாடிப் பாடினர்.

அங்குலச்சருக்க முற்றிற்று.

---

## சவுமினிச்சருக்கம்.

வாதராணன் பாததாமரைகளை மனத்திற்கொண்டு பரவசத்த னய்ச் சூதமுனிவர் சிவராத்திரியின் பெருமை யின்னமுஞ் சொல்லத் தொடங்கினர். கேளும் சைவமுனிவீர்கனே! கமலங்களாலும் குவ ளைகளாலும், ஆம்பல்களாலும் நெருங்கிய தடாகங்களில் கயற்கண் டைகள் கூத்தாடவும் தவளச்சங்குகள் குமுறவுங் குளிர்ச்சிவாய்ந்த மருதநிலங்கள் சூழப்பெற்றதுமாகிய கேகயநாடு என்னும்மாரு நகர முண்டு அந்நகரின் கோட்டை சிவபெருமான் திருவடிகளை எழுந்த ருளச்செய்துகொண்ட இருதயத்தையுடைய சிவஞானிகளின் அறிவு ஓங்குவதுபோல் ஆகாயத்தளவு நீண்ட மதிலாலும், சிவனடியார்களை விரோதிக்கும் புறச்சமயத்தவர் நாளுக்குநாள் தாழ்ந்து அடையும் கதியாகிய பாதாளத்தளவு தாழ்ந்த அகழிகளாலும், சூழ்ந்திருக்கப் பெற்றது. இப்பட்டணத்தில் கருகயாகம், மந்திரயாகம், தியானய

கம், ஞானயாகம் நடத்திவரும் விப்பிரகுலத்தவனாகிய வொருவனுக்குச் சவுமினியென்னுமொரு பெண்ணிருந்தனள் அந்தரத்தில்வாழும் அரம்பை, மேனகை திலோத்தமை முதலிய மாதர்களையும் அழகினில் சயித்தவள். வளப்பமிகுந்த செல்வத்திலே வளர்ந்து ஏழாவது வயதில் பேதைப்பெண்களுடன் கூடிச்சிறுவீடுகட்டியும், அம்மானையாடியும், ஊஞ்சலாடியும் சிற்சிலகாலங்கழித்து மங்கைப்பருவமுற்றனள் மேகமென்னுங் கூந்தலினையும், இளந்திங்களென்னும் நெற்றியினையும், வில்லென்னும் புருவங்களையும், கயற்கண்டை யென்னுங் கண்களையும், குமிழமலரென்னு மூக்கினையும் கோவைப்பழமென்னும் இதழினையும் முல்லையென்னும் பற்களையும் வள்ளையென்னுங் காதுகளையும், தாமரையென்னு முகத்தினையும் சங்கென்னுங் கழுத்தினையும் மூங்கிலென்னுந் தோளினையும், காந்தளென்னுங் கைகளையும், பொற்குடங்களென்னுந் தனங்களையும், நீர்ச்சுழியென்னு உந்தியினையும், மின்னலென்னு மிடையினையும், பாம்பின்படமென்று மல்குலினையும், வாழைத்தண்டென்னுந்தொடைகளையும்ஞெண்டென்னு முழந்தாள்களையும், விராலென்னுங்கணைக்கால்களையும், ஆமையென்னுந் தாள்களையும் மயிலன்ன சாயலையும், குயிலன்ன வோசையினையும் பெற்றனள், இவள் காமன்கணைகள் தாக்கச் சகியாதவளாய் மெலிந்து மதனநோய் பொறுக்காது அத்தேசத்து ஆடவர்கள் பலரையுங்களவாகச் சேர்ந்துவந்ததனால கருப்பமுற்றனள். அந்நகர் பிராமணர்யாவருமறிந்து ஒருங்குகூடிச் சவுமினியை நீக்கிவிடத்துன்பமுற்று ஒரு காட்டின் வழியே செல்லுகையில் வழியில் ஒருபுருடன் கண்டு நீ யெக்குலத்தவள்? யார் மனைவி, பேரேது, எவ்விடத்துச் செல்கின்றாயெனலும், அவள் தனது விருத்தாந்தங்களைச் சொல்ல அவன் மயல்கூர்ந்து தனது வீட்டிற் கழைத்துக்கொண்டு போயினன்.

இருவரு மதனும் இரதியும் போலக்கூடி தேகமிரண்டாகவும், உயிரொன்றாகவும் வாழ்ந்து இன்பமுற்று ஒரு பிள்ளையினையும் பெற்றுமகிழ்ந்தனர். இங்ஙனமாக வொருநாள் கணவன் வேற்றூருக்குச் சென்றனன். அக்காலத்துத் தனியேயிருந்த இவள் தான் குடித்திருந்த மதுவெறியினால் தொழுவத்திற்சென்று ஒரு இளங்கன்றுக் குட்டியை ஆடெனநினைத்து அறுத்துக்கொணர்ந்து வெளிச்சத்திற் பார்த்துச் சிவ! சிவ!! அறியாது கொய்துவிட்டனனேயெனத் துக்கித்து

வேறுவேறாகச் சிதைத்துச் சமைத்துப்புசித்து மீதியெலும்புகளைப் பொழுதுவிடிந்த பின்பு வீதியிலுள்ளார்க்குக் காண்பித்து அந்தோ! இராத்திரி புலிவந்து கன்றுக்குட்டியைக் கொன்று தின்றுவிட்டுப் போயிற்றேன முறையமிட்டனள். அயலூருக்குப்போயிருந்த நாயகன்வந்து கேள்விப்பட்டு மனைவியைநோக்கி ஆயினும் நீதப்பினையே போதும் போதும் நான்செய்த பாக்கியந்தானென்று சந்தோஷங்கொண்டு பழையபடி யிருவரும் வாழ்ந்தனர்.

சிற்சில வருடங்கட்குப்பின் கொடிய பிணிகள் வந்து தாக்கத் தேம்பிவருந்தி சவுமினிமரணமுற்றனள். அச்சமையத்தில் காகதூதுவர் இவளைப்பிடித்துக் கொண்டுபோய் தென்றிசையடைந்து நமன்முன் விடுப்ப இவள் வினைகளை யெல்லா மாராய்ந்து முகத்தினைப் பார்த்து எமன் கூறுவான். ஒருநாளிரவில் நீ பசுவின் கன்றினைக்கொன்ற காலத்து எங்களாண்டவன் திருப்பெயரினைக் கூறிய நன்மையால் கொடிய நரகத்துக் குரியவள் அல்லை ஆகையாலுலகத்தில் புலைமகளாய்ப் பிறக்கக் கடவை யென்றனன். உடனே மேனியினழகெல்லாங் கெட்டுப் பொறுக்கொணாத நோய்களுங்கொண்டு கண்களின்றி ஒரு புலைச்சியின் வயிற்றினிற் பிறந்தனள் கேளும் மகாரிஷிகளே, பூர்வசன்மத்தில் கற்பிழந்து பலரையும் புணர்ந்ததால் குட்டநோயும் சூலைநோயும் பெற்றனள். அன்னியருக் கொருபிடிசோறுங் கொடாததால் பசிநோயை யெந்நேரமுற்றனள். மாமிசம் புசித்தால் புலைச்சியாயினள் கன்றுடித்தமையால் கண்ணிலாமிழந்தனள் இவ்வாறாய் இவள்பிறந்தவுடன் தாயுந்தந்தையு மிறந்தனர். தன்னை மணந்துகொள்வார் யாருமின்றிப் புலைச்சேரியிற் பிச்சையெடுத்துப் புசித்து மிக்க தரித்திரமுற்றவளாய் வாழ்கையில் திரைமுதிர்ந்து கொக்குபோல் நரைத்துக் குரங்குபோல் கூன்பெற்று முதுமையை யடைந்தனள். அவ்வூரிலுள்ளார் மாசிமாசம் சிவராத்திரி விரதம்நோற்றிட கோகர்ணமென்னுந் தலத்திற்குச் செல்லக்கேள்வியுற்று இவளும் மற்றொரு புலைமடந்தையின் தோள்பிடித்துச் சென்றனள்; வெம்பசியதிகரிக்க வொரு தெருத்திண்ணையிலிருந்து கண்ணிலாக்கபோதிக்குச் சோறிடுமென் றிரந்துகொண்டிருக்கையில் வழிப்போக்கனொருவ னொருநாளோடி தன்கரத்திருந்த வில்வக்கிளையை யவள்மீது எறிந்தனன் அவ ளதனைத் தடவிப்பார்த்துத் தனக்குப் பிரயோசனமில்லாததால் பக்கத்தே வீசியெறிந்தாள், அது சமீபத்திலிருந்த பழைய சிவலிங்கமாய

கன் சிரசினில் வீழ்ந்தது அன்றையசிவராத்திரிமுழுதும் ஊணின்றித் துயில்நீங்கிப் பொழுதுவிடிந்தவுடன் மீண்டிஞ் சிற்சிலவீதிசென்று யாசித்துச்செல்லுகையில் பசியால் வருந்திக் கீழேவிழுந்து இறந்தனள். அப்போது சகலகுண சம்பன்னனான பரசிவப்பிரபு ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு கணங்கள்வந்து புலைச்சியின் ஆவியை மற்றொரு திவ்விய தேகத்தில் சேர்த்து விமானத்திலேற்றிக் கின்னராதியர்பாடிட, சின்னநூலிடை யரம்பையர் நடம்பயில், துந்துபி முழங்கிட, சாமரமிரட்ட கயிலையங்கிரி சேர்த்து அநாதிசுத்த வகண்டபரிபூரண நித்தியவியாபக சச்சிதானந்தரூபனுய்நின்ற நிட்களாதீத பரமசிவத்தின் முன்னிலையில் விட்டனர். சுவாமி அவள் முகநோக்கி இம்மலையில் மாதரோடு வாசஞ்கொண்டிருப்பாய் பின்முத்தி தருதுமென்றனன் என்று ஐம்புலன் வென்றசூதர் அருந்தவர்க் குரைத்தனர்.

சவுமினிச்சருக்க முற்றிற்று.

---

## கன்மாடபாதச் சருக்கம்.

நம்பெருமான் சிவராத்திரி விரதத்தின் சரித்திரமின்ன மொன்றுணர்த்துவேன் கேண்மின் முனிவர்களே, என்று சூதர்சொல்லலுற்றனர். மரகதமணி மாளிகைகளும், மாணிக்கத்தாலியென்ற ஆலயங்களும், வச்சிரஸ்தம்பங்கள் நாட்டிய மண்டபங்களும், கோமேதகத்தாலியன்ற மதில்களும் சித்திரப்பிரதிமைபோன்ற ஸ்திரீகள் உலவப்பெற்ற உபரிகைகளும், கீதநிர்த்தனஞ்செய்யும் அரங்கங்களும் நிறைந்த அயோத்திமாநகர மொன்றுண்டு. அந்நகரில் மன்னர்மன்னனாயிருந்தரசாண்ட தசரதசக்ரவர்த்தியின்பால் பூர்வகாலத் தவதோத செய்த ஸ்ரீராமன் வமிசமாகிய சூரியகுலத்தில் வந்தவன் தன் சஞ்ரத்து வசிக்கும் அரசர்களைப் பிரபு சக்தியினாலே தன் வசப்படுத்தியவன். நீதிசாஸ்திரத்தில் வல்லமந்திரிகளோடு காரியாகாரியங்களை ஆலோசித்து வருபவன். ஐசுவரியலட்சுமி சரஸ்வதி என்னு மாமி மருமகள் இருவருஞ் சமாதானமாய்த் தன்னிடத்து வாழப்பெற்றவன். இந்திரசகனன் என்னும் பெயரையுற்றவன். குன்றெனவளர்ந்து வீங்கும் குவிமுலை பவளச்செவ்வாய் வாய்ந்த மதயந்தி யென்னு மாதை மனைவியாகக்கொண்டு வாழ்பவன். இத்தகையோன் ஒருநாள் வேட்டைக்குச்செல்ல விருப்பமுற்றுமகுடநீக்கி, சுரிகைதாங்கி

மரகத கவசமிட்டு முதுகில் தூணி தொங்கவிட்டு வில்லேந்தி மனோவேகத்தினு முன்செல்லுங் குதிரைமேலேறி சங்கு படகம் கொம்பு துடி சத்திக்கவேல் வாளிபிடித்த சேனைகள் சூழ மண்துகள் எழும்பி விசும்பை மறைக்க விசேஷ ஆடம்பரத்துடன் வனத்திற் பிரவேசித்தனன். சேனைகள் கலைமான்முதலிய மிருகங்களை வளைப்பார் நாய்களை யவைகள்மீது விடுப்பார் அம்புகளைத்தொடுப்பார், தண்டால் புடைப்பார் கதையால் இடிப்பார் பொறிகளைப்புதைப்பார் எதிரிட்டவைகளை வதைப்பார் இவ்வண்ணம் காட்டினிடத்துப் புரியுஞ் சமயத்து அவ்விடத்தில் சகோதரர்களாகிய அரக்கர் இருவர் வந்தெதிர்த்து யுத்தத்திற் காரம் பித்தனர், சூலல் தோமரம் பிண்டி பாலம் கதை சவரம் வில்லு தண்டு நாஞ்சில் முசலம் வாள் கணை ஆலம் கால பாசம் ஒருவருக்கொருவர் பிரயோகித்தனர். இந்திரசகனன் வில் வளைத்து நாணொலிசெய்து கூறியபாணங்களைக் காலமுகில்கள் போல விடுத்து ஓர் கணத்திடை ஒருவன் தலையைத் துணித்தனன். மற்றொருவன் பின்வாங்கி இவ்வரசனைச் சூதால் கொன்றிடுவோமென்று மனிதவுருவெடுத்து முன்வந்துதொழுது வணங்க வேந்தன் உன்வரவேதென்ன, அரசனே உன்னிடத்து ஏவல்செய்ய வந்தேனென்னலும் சமையற்றொழிலை யவனுக்குக் கொடுத்தனன். பின்பு வனத்தைவிட்டு அயோத்தி நகரடைந்து மதயந்தியுடன் சுகமாக வாழ்ந்து வருகையில், தங்கள் மூதாதைகட்குப் பிதிர்க்கடன் செய்யும் திவசஞான் வந்திட வடதிக்கில் வாழ்ந்து கொண்டிருந்த வசிட்ட முனியை யழைப்பித்து ஆசனத்திலிருத்தி, அருக்கியபாதமுதலிய வர்ச்சனைகள் ஆற்றிப்போசனத்திற் கெழுந்தருளப்பண்ணி அன்னம்படைக்கையில் மனிதரூபந்தாங்கி வந்திருந்த அரக்கன் நரனுடலைச்சமைத்து இட்டனன் இதைக்கண்ட ருஷிகோபித்து ஏ அரசே! நீ உன்னுடைய செல்வமெல்லா மிழந்து காட்டினிடத்தே இராட்சதனாய்ப் பிறக்கக்கடவையென்று சாபமிட்டனர். வேந்தன் சீறி என்மீது சற்றுந் தப்பிதமில்லாதிருக்கச் சபித்தனை ஆகலின் உனக்குப் பதிலிடுகிறே னேற்றுக்கொள்ளென்று கரத்தில் சலம்விட்டமாத்திரத்துத் தனது மனைவியாகிய மதயந்தி தடுத்து நாயக, எக்காலத்தாகிலும் அரசர்கள் ஆசாரியரைச் சபித்ததுண்டா இது தகாது, தகாது, என்றனள். உடனே அந்நீரைத் தனது பெருவிரலின்மேல் விட்டமாத்திரத்து விரல் கருத்தது அதுமுதலவன்கன் மாடபாதனென்னும் பெயர்பெற்றனன், காவலன்கோபம் தணிந்துநிற்க முனிவனு முனிவு ஒழிந்து

பிழை அரக்கனால் வந்ததென யோகத்தினால் தெரிந்து அண்ணலே நீ கானிலடைந்து பனிரெண்டாண்டு சஞ்சரித்திடில் சாபமாறி விடு மென்று சொல்லியேகினான். இறைவன் இராக்கதனாகி இருண்ட கானகத்திற்றிரிந்து விலங்கின்கூட்டமெலாம்பிடித்துத்தின்றுகொண் டிருந்தனன், ஒருநாள் அவ்வனத்தின் வழியே ஒரு பிராமணன் தனது மனைவியோடு வரக்கண்டு சென்று அப்பிராமணனைக்கொல்ல முயலுகையில் பிராமணத்தி இராக்கதன் முகநோக்கி என் நாயகனை கொல்லற்க அவனிறப்பனேல் நான் உயிர்விடுவேன் ஆகலின் மாங் கல்யபிச்சையீவாய் என்றலுங்கேளாது அப்பிராமணச் சிறுவனைப் பிசைந்து உதிரங்குடித்து மாமிசத்தைத் தின்று எலும்புகளை அவள் முன்வீசினன். பிராமணமாது அவ்வெலும்புகளை எல்லாம் மடியில் வைத்துச்சென்று நெருப்பிலிட்டு என்னாயகனைக்கொன்ற இவன் தன துமனைவியைச்சேரில் இறக்கக்கடவனென்று சாபமிட்டுத் தானும் அக்கினியில் விழுந்து உயிர் நீங்கினள்.

பனிரெண்டாண்டு சென்றபின் இராக்கதவடிவத்தைக்கன்மாட மாதன் நீங்கிப்பேரழகினை வாய்ந்த காமனென்ன அயோத்திநகரினை அடைந்து வெகுநாள்பிரிந்திருந்த நீர்மையினால் தாமசியாது மதனன் வாளியினால் பிளவுபட்ட மார்பினனாய்த் தனதுமனைவியாகிய மதயந் திபாற்சென்று அவளை மருவத்துணிந்தவுடன், என்னருமைகணவ! நீ காட்டினிடத்துச் சஞ்சரித்தகாலத்து ஒரு பிராமணனைக் கொன் றனை அவன்மனைவி நீயுன்தேவியுடன் புணரில் இறப்பாயென்று கடு ஞ்சாபமிட்டு அவளும் மாண்டனள் என்றாள் அதனால் அரசன் நொந் து ஓ! ஓ! என்வினையிருந்தவாறு மிக்கவழகு இத்தகைய சாபமும் எனக்கெய்துமா! இல்லறத்தி லிருந்துவாழ்ந்து ஒருபுத்திரனைப் பெறு விடில் முத்தியில்லை யெனப்பெரியோர் சொல்லுகின்றனரே யிதற் கென்செய்வது, நல்லது இதனை நீக்கும்பொருட்டுத் தவஞ்செய்தலே யுத்தம பொருட்டுத் தவஞ்செய்தலே யுத்தமமென்று தீர்மானித்து ஒருமனமாக இருந்து இருவினைகளும் சமமாக முக்குற்றங்க ளுங்கடிந்து நால்வேதத்துண்மை புணர்ந்து ஐந்தீவளர்த்திப் பெருந் தவங்கள் செய்துகொண்டிருந்தனன். அப்போது விடத்தைக்கக்கிக் கோபமிகுத்துக் கோரதந்தங்களைப்பெற்றுப் பெரியவாயினையுடைய வொரு பேய் எதிரில்வந்து வருத்த இதன் வரலாறென்னென முனி வரை வினவினான். முன்னாள் நீ அரக்கனாகிக் குற்றமில்லாத வேதி

யனைக்கொன்ற பாவம் அலகையாய் வந்தது என்றனர். இதையொ ழிக்க வெண்ணிச் சேதுவரையிற்சென்று தீர்த்தங்களெல்லா மாடி யும் பல தலங்களைத் தரிசித்தும் நீங்காது கவலையுற்றிருந்தனன். அச்சமையத்தங்கு சிவபெருமானே திருவுருக் கொண்டாற்போல முழுநீறு பூசியவராய்க் கௌதமமுனியென்பவர் அரசன் முன் சமீ பிக்க உடனே போற்றி யடிதொழுது கைகூப்பிநின்றிட முனிவர் ஆசீர்வதித்து ஓவேந்த! நின்முககமலம் வாட்டமுற்றிருப்பதென்னே யென்றனர் முனிபுங்கவரேவசிஷ்டர் சாபத்தாலரக்கனுருவம்பெற்று வனத்திரிந்து பிராமணனைக் கொன்றபாவம் அலகையாய் வந்து என் னைப்பீடிக்கின்றது. பலதீர்த்தங்கள் முழுகினேன் பலபலதலங்கள் சேவித்தேன் பற்பல தருமங்கள்செய்தேன் பற்பல மந்திரம் சொற் றேன் யாதினு நீங்கவில்லை யென்செய்குவே னென்றனன். மன்னவ! வருந்தலை! அநாதிமல முத்தராய் சுத்தசாட்குண்ணிய பரிபூரணராய் அநாதிபெத்தராகிய பசுக்களுக்கு உபகரிக்கும் பொருட்டுத் தமது சத்தியென்னும் கருவியைக் கொண்டே பஞ்சகிருத்தியஞ்செய்யும் இயல்பினராய் இலயம்போகம் அதிகாரமென்னும் வியாபாரபேதத் தால் ஈசன் சதாசிவன், சாந்தன் என்னு மூவிதஸ்வரூபமுடைய ஒரு வரேயாயுள்ள நம் சிவபெருமானை அனுட்டிக்கும் நோன்புகட்கு மே லான விரதமொன்றுண்டு அது நீ யறிந்திலைபோலும் மாசிமாதம் அமரபட்சம், சதுர்த்தசித் திதியில் தேவநாயகனைப்போற்றி நான்கு சாமமும் அருச்சிக்கில் நின் துன்பம் நீங்கும் அத்தகையவிரதம் செய் திடற்குத் தலங்கேண்மோ, நமது அம்மையப்பர்கள் சதாவாழப் பெற்றது. அலைமகன் சமேதனும் மலர்மகள் சமேதனும் வணங்கத் தக்கது ஒரு நாமமுமில்லாத அவன் புகழை ஆயிரந்திருநாமங்களால் பாடும் முனிகணங்கள் எண்ணிலர் சித்திபெற்று வாழ்வுற்றது. கோ கன்னம் என்னும் அருமைத்திருநாமம் பெற்றது. மோட்ச மடை தற்கித் தலத்தைக்காட்டினும் வேறுண்டோ இல்லை! இல்லை!! பூர்வ காலத்தில் இலங்காபுரியை அரசாண்டிருந்த இராவணன் சிவபூசை செய்தற்கெண்ணி வெள்ளிமலை யடைந்து சிவபெருமானை வேண்ட லும் சுவாமி கருணைகூர்ந்து ஒரு சிவலிங்கத்தை அவன் கைகொடுத் துத் தசகண்டா இவ்விலிங்கத்தைப் பூமியில் வைத்திட்டால் மறுபடி யுமெடுக்கவொண்ணாது, ஆகலின் வாகனமேறாமல் நீயே யேந்தி கொண்டுபோய் நினதுதேசத்தில் பிரதிஷ்டைசெய்து பூசிப்பாயென் றருளினார் அவ்வாறே யிசைந்து விடைகொண்டு செல்லுகையில்

பொன்னுலகத்துத் தேவர்களெல்லா மொருங்குசேர்ந்து ஆலோசிக்கத்தொடங்கினர் இஃதென்ன! கொள்ளை இவ்விராவணன் இப்பெருமானைத் தனதுநாட்டில் வைத்துப்பூசிக்க வாரம்பிப்பனேல் இவனைச் செயித்தற்கு யாரால்முடியும் இதுவரையில் நாம் பட்டது போதாதா இராமனால் முடிவுறுவா னென்றிருந்தோமே இனி ஆயிரங்கோடி இராமர்கள் வரினும் அவனை யென் செய்யவல்லவா இப்போதே ஒரு தந்திரஞ்செய்ய வேண்டுமெனத் தீர்மானித்துத் தங்களுக்குண்டாகிய விக்கினத்தையொழிக்க விக்கின விநாயகரை வந்தித்துச் சொல்வாராயினர் ஓ! விகடதடதும்ப கெம்பீரதரனே! இக்கணமே யெழுந்தருளி சிவலிங்கப்பெருமான் இலங்கைக்குச் சேராவண்ணம் அருள் செய்ய வேண்டுமென்றனர். ஏகதந்தன் இசைந்து இராவணனுக்கு நீரையதிகரிக்கச்செய்து வழியில் தான் ஒரு பிராமணச் சிறுவனாய் நின்றார். இராக்கதன் சலவிசர்ச்சனம் பண்ணவேண்டித் தன்முன்னிருந்த பிராமணப்பிள்ளையை நோக்கிச் சிறுவ! இப்பெருமானைச் சற்று எந்திடுவாய் நான்சலவாதை கழித்துவருகிறே னென்றனன் ஐயா! மூன்றுதரம் அழைப்பேன் அதற்குள் வாராவிடில் கீழேவைத்திடுவன் அதிகநேரம் தாங்குவதற்குச் சத்தியில்லாச் சிறியவன் யான் என்றனர் விநாயகர் அதற்கிசைந்து அவர் பால்கொடுத்து அயலிடஞ் செல்லுகையில் மும்முறைக்கூவிக் கீழேவைத்து விட்டனர். இராவணன்வந்து பார்க்கையில் பெருமான் நிலத்திருக்கக்கண்டு தனது இருபது கைகளாலும் சேர்த்துத்தழுவி தூக்கவும் அசையாதாக மாபலமென்று அதனால் பெருமானுக்கு மாபலலிங்கம் எனப்பெயராயிற்று எடுக்கையில் கோவின் காதுபோல் குழைந்து விட்டதால் அந்நகர் கோகன்னம் எனவும் பெயர்பூண்டது,

இங்ஙனஞ் செய்பவரேமோவென இராவணன் கோபங்கொண்டு சமீபித்துநின்ற சிறுவனைக் குட்டினன். உடனே கணேசர் பூமியும் ஆகாயமும் மற்றையவிடமும் நிறைய விராட்டுருவங்கொண்டு தசக்கிரீவனைப் பிடித்து ஆகாயத்திலெறிந்து எறிந்து பந்தாடலுற்றார். அதனால்வருந்தி அம்பிகை தனயா, அரிநிருமருகா, ஆகுவாகனனே அடியேனின்சரணம் தேவரீரை மறையோனென நினைத்து மடமையால் செய்த பிழையைப் பொறுத்தாள்வாய் என் றிறைஞ்சுதலும் கீழேவிடுத்து நிருதர் வேந்தனே நினது இருபது கரங்களாலும் பத்துத்தலைகளில் குட்டிக்கொள்ளுவா யென்றவுடன் அவ்வாறேசெய்து

கூத்தாடிச் சந்தோஷிப்பித்தான் விநாயகமூர்த்திகண்டு உவந்து இலங்கேசா, இனி என்னலம் வேண்டுவார் நின்னைப்போ லிருகரங்களாலும் குட்டிக்கொள்ளுபவரிடத்துச் சிந்தை மகிழ்வேமென் றருளி மறைந்தனர் நிருதனும் இலங்காதீபத்திற் சென்றனன். ஏ கன்மாடபாதனே, இத்தகைய திவ்யத்திருத்தல் மெங்கணுமில்லை பூர்வத்தில் இத்தலத்தில்தான் சவுமினியென்னும் புலைச்சியும் முத்திபெற்றனள். ஆகலின் நீரிமந்த கோகன்னத்தை யடைந்து போற்றித் தீதகன்று சிவராத்திரி விரதம்நோற்று நின்வினையனைத்துந் தீர்த்திடுவாயென்று கௌதமமுனிவர் சொல்லியேகினர் அரசன் ஆசிரியா அறிவித்தபடி அக்கோகன்னத்தை யடைந்து ஆகமத்தின் பிரகாரம் சிவராத்திரி விரதம்செய்து பிரமசத்திதீர்ந்து தன்னெண்ணப்படி சிற்சிலகாலம் இல்லறத்திருந்து புத்திரப்பேறடைந்து பின் துறவுபூண்டு பரமன் கழலடைந்து பேரின்பமுற்றனன் என்று தவத்தோரெல்லாம் மிக மகிழ்ந்து முடிதுளக்கிக் கேட்டு வப்பத் தவஞான சொரூபியாகிய சூதர் விளம்பினர்.

கன்மாடபாதச்சருக்க முற்றிற்று.

---

## விபரிசச்சருக்கம்.

திரிபுவனங்களில் நடந்தனவும், நடப்பனவும் ஆகிய விருத்தாந்தங்கள் யாவற்றையும் ஞானவிலோசத்தினாலே கரதலாகமலம்போற் கண்டுணரும் மகிமைவாய்ந்த சூதமுனிவரின்னமோர் சிவராத்திவிரதத்தினைக் கழறக்கேண்மினெனச்சொல்லுவர் முனிவீர்காள்! அநந்த நட்சத்திரக் கூட்டங்களிலே சந்திரன் பிரகாசிப்பதுபோல பூமண்டலத்திலே எண்ணிறந்த வரசர்களின் மத்தியில் சக்ரவர்த்தியாயிலங்கும் விபரிசுனென்னும்பெயரையுடையவனுப் புராதலப்பதியாண்டு வரு மொருவனுளன் இவன் நாடோறுந் தண்டமுதலிய வாயுதங்களைக்கொண்டு சேனைசூழக் கானிடைக்குறுகி மான்மறைமுதலிய மிருகங்களை வேட்டையாடி யருந்துவன். பார்ப்பனமாதரையும் பஞ்சமமாதரையும் விரும்பி யவருடன் குலாவி யின்பநுகர்ந்து வருவன் பிரதிமாதங்களிலேயும் பூர்வபட்சம் அமரபட்சங்களில் வரும் பதினுன்காந்திதியாகிய சதுர்த்தசியன்று துயில்நீத்து ஊணொழிந்து பரமேஸ்வரனைப் பஞ்சகவ்வியத்தாலாட்டிக் கூவிளம்சாத்தி விதிதவராது

விருப்புடனருச்சனை செய்வான் ஒருநாள் அவன்மனைவியாகிய குமுத வதியென்பவள் அவனைப்பணிந்து எ நாயக! நீர் ஆகமவிதிப்படி வழாது சிவராத்திரி விரதம்நோற்று வருகின்றீரே விலங்கினைத்துங் கொலைசெய்து உண்ணுதலையும், மாதர்கள் போகத்தினையும், நீக்கினு யில்லையே யிந்தத்தன்மை யென்ன சாற்றுதியென்றாள். இதைக் கே ட்ட விபரிசன் புன்னகைகொண்டு பெண்ணே! பூர்வதவப்பயனால் நான்மூன்றுகால வர்த்தமானமு முணர்வேன் கேட்பாய் முன்சென் மத்துப் பம்பைமாநகரில் ஞமலியாக உதித்திருந்தேன் ஒருநாள் பம் பை நாயகனுடைய திருவாலயத்திற்குச்சமீபித்துப் பலியன்னம்உண் ணச்செல்லுகையில் கோயில் வினையாளர் என்னை ஓட்டத்தடிகொ ண்டு தொடரபயந்து ஆலயத்தை வலமாயோடித் தப்பித்துக்கொள்ள முயலுகையில் வழிகாணாது பலபீடம் சமீபிக்க அச்சமையத்து அங் கு ஆதிசைவர் நெய்த்தீபச் சுடர்த்தட்டேந்தி ஆராதனைசெய்து அரு ச்சித்தலைத் தரிசித்தேன் உடனே பின்னாலொருவனிருந்து அம்புவிட பட்டு இறந்தேன் அன்றைபதினம் சிவராத்திரி யானதாலும ஆலயத் தினை வலஞ்செய்ததாலும், பெருமான் திருமுன்னரி யிறந்ததாலும் விமலனைத் தரிசித்தாலும் காலமூன்றுணருந் தன்மைபெற்று இந்நக ரில் தலைவனாகி வாழ்கிறேன். இப்பலனைக் கொடுத்தது அச்சிவராத் திரி விரதமெனக்கருதி பிரதி பட்சங்களில் இப்போதும் நோற்று வருகிறேன் நான்செய்யுந் தீமைகளெல்லாம் சூரியன்முன் பனிபோ லாகுமெபதில் யாதொரு தடையுமில்லை ஆகலின் நீயும் பரமனை வழி படச் சிவராத்திரி விரதத்தினை நோற்பாயென்றனன். இவற்றைக் கேட்ட பத்தினி நாயகனைநோக்கி எனது பூர்வசன்மத்தினைத் தயை செய்வாயென்ன விபரிசன்சொல்வான் மாதே, நீ மல்லிகார்ச்சுனத் தின் சிவாலயத்தில் புறவுபட்சியாக விருந்தனை ஒருநாள் மெல்லிய தசையை வாயிலேகவ்விக்கொண்டு பறக்கக்கழுகு ஒன்று உன்னைத் தொடர்ந்தது நீ பயந்து சிவாலயத்தை வலமாகச்சுற்றியோடிக் கொ டிக்கம்பத்தில் தங்க அவ்விடத்துப் பருந்தாற்கொல்லப் பட்டிருந் தாய் தசையை கிரகித்துக்கொண்டு கழுகு பறந்துவிட்டது நீ சிவால யத்தினை வலமாகவந்து கொடிக்கம்பத்தின் சமீபத்திறந்ததால் பார்த் திபன் மகளாகப்பிறந்து என்னை இப்போது மணந்தாய் என்றனன். இவை கூறக்கேட்டு அவள் எழுந்து போற்றி நன்றிது நீயுநானுமினி பிறக்குந்தன்மையைச் செப்புவாயென்றாள். அன்னமே, இனி நான் சிந்துநாட்டி னரசனுப் பிறப்பேன் நீ சஞ்சயன் மகளாயுதித்து என்

ளையே யணைவாய் மூன்றும் சன்மம் நான் சவுராட்டிர நாட்டின் மண்ணவனுவேன் நீ கலிங்கர்கோன் புத்திரியாகி என்மனைவியாவை நான்காம்சன்மத்தில் காந்தாரநாட்டுத் தேசாதிபதியாவன் நீ மகதர்கோன் புதல்வியாகி என்னை விவாகம் செய்வாய் ஐந்தாஞ்சன்மத்தில் அவந்திநாட்டை யாளுவேன் நீ தாருணன் குமாரத்தியாகி என்னைக் கலப்பாய் ஆறும் சன்மத்தில் நான் அருத்தநாட்டி லவதரிப்பேன் நீ ஆத்தன் பெண்ணாய் என்னை யுறவுகொள்வாய் ஏழாஞ்சன்மத்தில் நான் கைதவன்குலத்தில் தோன்றிப்பது மவன்னன் என்னப்படுவன் நீ விந்தநாட்டில் வசுமதி நாமத்தோடுதித்து வாழ்ந்து கொண்டிருக்க நின்பிதா விவாகம்செய்யத் தீர்மானித்து மணிகள் வேய்ந்த மண்டபம்சோடித்துத் தூதர்பால் ஓலைகளைக் கொடுத்துப் பலதேசத்து அரசருக்கு விடுப்பன் அவ்வமையத்தில் அங்கம் அருணம், அவந்தி, ஆந்திரம் இலாடம் ஒட்டியம் கருசம் கலிங்கம் கன்னடம் கன்னுடம் காசம் காசிமீரம் காந்தாராம் காம்போஜம் கிராடம், குருகு குடகம் குந்தளம் குரு குலிந்தம் கூர்ச்சரம், கேகயம் கேரளம் கொங்கணம், கொல்லம் கோசலம் சகம் சவ்வீரம் சாலவம் சிங்களம் சிந்து சீனம் சூரசேனம் சோழம் சோனகம் திராவிடம் துளுவம் தெங்கணம் நிடதம் நேபாளம் பப்பரம் பல்லவம் பாஞ்சாலம் பாண்டியம் புலிந்தம் போட மகதம் மச்சம் மராடம் மலையாளம் மாளவம் யவனம் யுகந்தம் வங்கம் வங்காளம், விதர்ப்பமுதலான தேசத்தவர்கள் வந்துசேர்வர் யானுமங்கெய்த நீ யென்னையே மாலைசூட்டுவாய் அக்கால மேற்சொன்ன வரசர்கள் என்னோடு யுத்தஞ்செய்வர் யானைக் குழாத்தினுள்ளே ஓர் சிங்கம்போய்ச் செருச்செய்தாலென்னத் தண்டாயுதபாணியாய் எதிர்த்துத் தேர் கரி பரி எல்லாந் தொலைத்து வில்லைவளைத்து நாணொலிசெய்து கூரியபாணங்களை மழை சொரிந்தாய்போலச் சொரிந்து கலக்கி ஓர் கணத்திடை பின்வாங்கச்செய்து ஜயங்கொள்வேன், பின்புநாமிருவரும் கூடற்புரிசென்று அனேககாலம் சுகமாக வாழ்ந்து மகங்களாற்றி, மறையவர்க்கு நிதியீந்து, சிவபெருமான் திருவடியைப்பூசித்து, ஒரு செல்வமகனைப்பெற்று, அவனுக்கு மணிமுடிசூட்டி இராஜாங்கத்தை யவன் பாலொப்புவித்துச் சனனமென்னுங் கொடியபிணிகெடப் பெருந்தவமியற்றுவோம் ஒப்பும் உயர்வுமில்லாது தனக்குத்தானே சமானமுடையதும் தெய்வத்தன்மை பெற்று விளங்குவதுமாகிய தமிழ்ப்பாஷையைச் சண்முகக் கடவுளிடத்துக்கேட்டபடி இவ்வுலகிற் பரவச்செய்த அகத்தியமுனி நம்முன்வரு

வர் அவர்பால் நாம்பஞ்சாட்சர உபதேசம்பெற்றுச் சிவயோகஞ் செய்து சிவத்தோடிரண்டறக்கலப்போம். பம்பைநாட்டில் நாயாகப் பிறந்து சிவராத்திரியன்று சிவதரிசனம் செய்யப்பெற்றதால் இத்யாதி செல்வத்தினை யடைவோம். பதிவிரதா ரத்தினமே! நீயு மிவ்விர தத்தினை நோற்பாயென்றனன். இந்தப்பிரகாரமாக இருவரும் மாதந் தோறும் வரும் சதுர்த்தசிகளில் சிவராத்திரி விரதம் இயற்றிப் பேரின்ப வீடெய்தப் பெற்றனர். சிவபெருமான் கோயிலிற்சென்று சிவராத்திரி விரதம் நோற்றுவருபவரைத் தரிசிக்கினும் முத்தியெய்து மெனி னதன்பெருமை நான் சொல்லற்பாற்றோ என்றனர் சூதமுனிவர்.

விபரிசச்சருக்க முற்றிற்று.

---

## குபேரச்சருக்கம்.

குளிர்ச்சி பொருந்திய திருப்பாற்கடலி லுண்டாகிய ஆலகாலத்தை யருந்திய நாதன் சங்கக்குழை காதன் பொன்மலையை வில்லினிலாகவளைத்து முப்புரமெரித்தநாள் அவன் ஏறிய பூமியாகிய தேரினை நடத்திய சூதனுக்குச் சமமான சூதமுனிவர் இன்னுமோர் சிவராத்திரி கதையையுரைப்பர். வெண்மையான முத்துக்களை நூல்வடத்தில் முறைமுறையாகக் கோத்து வைத்தாலென்னச் சிதரிவிரிந்த பூம்பாளைகளையுடைய மரகதநிறத்தினைவாய்ந்த கமுகமரத்தின் குலையையுண்டு அலைத்துக் குரங்குகள் சிந்தவுஞ் சங்குகளைக் கைத்தலத்தெடுத்துக்கம்பளரெறிந்திடுங் காம்பிலிநாடொன்றுண்டு தடாகத்திலுள்ள மலர்களைத் துவைத்துக் கரையில் தவழ்கின்ற சங்குசக்கிய முத்தை இளஞ் சந்திரனென்று நினைந்து நீலோற்பலங்கள் முறுக்குடைந்தெ ழெழுக்கும் கரும்புகளை எருமைகள் முறிக்கச் சிதறிய முத்துகள் அடுத்து வாழ்ந்து கொண்டிருந்த சூல்கொண்ட தவளைகள் மேற்பட அவையாற்றும் பாக்குமரங்கள் வாழைமரங்கள் பலாமரங்க ளாங்காங்கு நன்செய் நிலங்களில் தழைத்து ஒங்கும் உலையிற்காய்ந்த இரும்பென்னச் சிவந்த வானத்திலெழுந்த இளஞ்சந்திரனுக்கு ஆண் வண்டுகள் மலர்களிலுள்ள மகரந்தப்பொடியை விபூதியெனச்சாத்தி அரும்பாகிய கலசத்திலுள்ள நெய்யையூட்டிக் கிளைகளாகிய தொட்டிலிலேத்தி அசைத்துப் பெண்வண்டுகள் காலாட்ட வோங்கிவளாந்திடும் சோலையுண்டு இனையவளப் பங்கணிறைந்த அப்பட்டணத்தில்

வேதாகமங்கள் நன்கு உணர்ந்தவனும், சிவபெருமான் திருவடியை நீங்காதமனத்தை யுடையவனும், காமம்வெகுளி மயக்கமென்னு முக்குற்றங்கள் கடிந்தவனுமாகிய வேள்விதத்த னென்னுமொரு பிராமணனுண்டு அவனருந்தவஞ்செய்து ஒருபுத்திரனைப் பெற்றுக் குணநிதியெனப் பெயர்வைத்து வித்தியாப்பியாசஞ்செய்து சுருதிமுதலாகிய கலைகளில் நன்குபயிற்றுவித்தான். இருண்டு சுருண்டு நீண்ட கூந்தலையுடைய தோகையர்கள் மருவுங்காமனென்ன வழகினனவாய்ந்த வயதை அவனுடைய நல்ல சுபதினமாராய்ந்து ஒரு கன்னிகையை விவாகம் செய்துவைத்தனன். குணநிதிதாய் தந்தையர்கள் வீட்டிலேயே யின்புற்று வாழ்ந்துகொண்டிருக்கையில் பூர்வவினையின் வசத்தால், துன்பத்தினையும் பகையினையுங் கொடுக்குஞ் சூதாடுதலில் மனம்வைத்துத் தந்தையறியாவண்ணங் கல்விபயிலாத கடையர்களோடுக் சேர்ந்து இரவும்பகலும் சூதாடி ஆபரணம் வஸ்திரம் பணம் முதலிய தோற்றுவருவான். பிள்ளை யெங்குற்றானென்று தந்தை கேட்குந்தோறும் கல்வியோதற்குச் சென்றானென்று தாயானவள் சொல்லிவருவாள். தனியே ஒருநாள் குமாரனைத் தாயாரழைத்து குழந்தாய்? நீ செய்யுஞ் சூது சங்கதியை நின்தந்தை கேள்விப்படில் உன்னையு மென்னையுஞ் சீறிக்கோபிப்பர். இதுகாறு நின்தந்தைபால் சொல்லாது மறைத்துவைத்து வருகிறேன். உன்னுடைய பிதாவின் நீதியைச்சற்றுந்தெரிந்தாயில்லை மற்றப்பிராமணப்பிள்ளைகளின் நடக்கையினைக்கண்டு முணர்ந்தாயில்லையென்று பலவாறுகப் புத்திசொல்லியுஞ்சிந்தையிற்கொள்ளாது தன்னிஷ்டப்படி நடந்துவந்தான். ஒருநாள் குணநிதி தன் தகப்பன் தன்தாயாரிடத்திற் கொடுத்திருந்த மோதிரத்தைத் திருடிக்கொண்டுபோய்த் தோற்றுவிட்டனன். வேள்விதத்தன் ஒருநாள் கடைவீதியி லொருசிறுவனைக்கண்டு அவன் விரலில் தனது மோதிர மிருக்கப்பார்த்து இதேது எவ்வாறு உனக்குக் கிடைத்ததென்றனன் பிராமணோத்தமரே? நான்திருடியதன்று நின் மைந்தன் சூதாடித்தோற்று விட்டனன். பிரதிதினமும் எவ்வளவோ திரவியம், கலன்கள், ஆடைகள் தோற்றுவருகின்றான். இது சங்கதி நீ ரறிந்திலீரோ? என்றனன். இரும்பினைக் காய்த்துக் காதுகளில் விட்டாலென்னக் கேட்டு வீட்டிற்குச்சென்று மனைவியை நோக்கி நின்புதல்வனெங்கென்ன நீராடநதிக்குச்சென்றன னென்றாள். நேற்றையதினம் எண்ணெயிட்டுக் கொண்டபோது கழற்றித்தந்தமோதிரமெங்கென்ன பகற்கடன் முடித்துவாரும் பின்னர் தருகிறேனென்ற

னன். பிராமணன் கோபாவேசத்தனாகி அடீ! பாவீ! தருமநெறியி னின்றுந் தவறிக் கற்பினுக் கிடையூறாகப் பொய்பேசினாய், நின்மக னுஞ் சூதாடி படிறனானான் நீங்களிருவரும் இனியெனக்கு வேண்டுவ தில்லையெனச் சொல்லிவிட்டுத்தான் அயலூருக்குச் சென்றுமற்றொரு மடந்தையை விவாகஞ்செய்துகொண்டு வாழ்ந்தான். பின்பு குண நிதி யென்பான் ஒன்றுந்தோன்றாதவனாகி யென்செய்வேன், எப்படி பிழைப்பேன், கல்வியுங்கற்றிலேன், பொருள் சம்பாதிக்கும் வழியுந் தெரியேன். நல்லவர்கள் சினேகமுமில்லேன் என்று சலிப்புடன் வாழுநாளில், சிவராத்திரி விரதம்நோற்கச் சிவாலயஞ்செல்லும் ஒரு பிராமணன் பின்சென்று கோயிலின்மூலையி லொளித்திருந்து இரவு முழுதும் கண்விழித்து விடியற்காலத்து உள்ளே நுழைந்து விளக் கைத்தூண்டி அங்கிருக்கு மன்னத்தினை யெடுத்துக்கொண்டு திரும்பு கையில் அவ்விடத்துத் துயிலுமொரு மறையோன் காலைமிதித்திட் டான் வேதியன் விழித்து நோக்கிக் கொதித்துக்கள்வனெனப் பிடித் துக் கூக்குரலிட நகர்காப்பாளர்வந்து கட்டிக்கொண்டுபோய்ச் சிரச் சேதஞ்செய்து விட்டனர்.

அவ்வேளையில் அந்தகன்தூதர் வெங்கதை கொண்டுவந்து கட் டியேகுகையில் கண்ணுதல் கணநாதர் எதிர்ந்து விடுமின்கள் இவன் மிகத்தவத்தைச் செய்தோன். சிவராத்திரியன்றை யிரவு முழுதும் விழித்திருந்து தீபத்தைத்தூண்டிச் சிவபெருமானைத் தரிசித்தான். என்றுசொல்லி விடுவித்துச் குணநிதியென்பவன் முகநோக்கி, நீ கலி ங்கநாட்டு அதிபதியாக விருக்கும் அருந்தமனுடைய பிள்ளையாகி உத்தமனென்ற பெயரோடுவாழ்கவென்று சொல்லிப்போயினர் அவ் வாறே கலிங்கநாட்டிற்பிறந்து சிவாலயங்களிலே நிதம் நெய்விளக்கே ற்றி நறுந்தூபமாற்றி நன்மலர்சாத்தி அருச்சனை பலபுரிந்தான் இன் னவாறு பலதருமங்களியற்றி உலகமெலாம்புரந்து பின்பு மானிடச் சட்டையைநீத்து அளகாபுரியின் குபேரனாக வீற்றிருந்தனன், சில நாள் கழிந்தபின் காசியிற் சிவலிங்கந்தாபித்து யருச்சனை செய்யச் சுடர்ப்பிழம்பாகிய சடைப்பெம்மான் மலைமகளோடு வெளிப்பட்டு என்னவரம் வேண்டுமென்றனர். குபேரன் அம்மையாரை நோக்கி இவள் இப்பெருமானை சதாவிட்டு நீங்கப்பெறாதவமென்ன செய்தன ளென்று எண்ணியகாலையில் உடனே ஒரு கண்ணிழந்தனன் சுவாமி பார்வதியை நோக்கி தாட்சாயணி, இவன் தவத்தின் பெருமையை யந்தானன்றி யாதொரு தீங்கிழைத்தா னில்லை யாகலின் கண்ணளிப்

யாய் எனலும் அம்மணி பொற்கண்ணையளித்தனள் விழிப்பெற்றுத் தோத்திரஞ்செய்யப் பரமசிவன் அவனைநோக்கி நீ யின்று முதல் எனது தோழனெனப்பெற்று மலைபொத்த நிதிகளையுற்றுப் புட்பக விமானத்துடன் அளகாபுரியை யாண்டு வருவாய் எனத்திருவாய் மலர்ந்தருளினன். சிவராத்திரியன்று ஒருதீபத்தைத் தூண்டிய புண்ணியத்தால் குபேரனாயினனெனில் அன்றையதினம் பலதீபமேற்றியோன் புண்ணியத்தைச் சொல்ல நம்மால் முடியுமோ, அம்மம்ம! ஆயிரநாவுடைய ஆதிசேடனும்பின் வாங்குவன். சிவராத்திரியன்று தினையளவு தருமஞ்செய்யினும் ஆயிரங்கோடியாக வளரும். என்று துறவிகள் கேட்பச் சூதமுனிவர் சொல்லிமுடித்தனர்.

குபேரச்சருக்க முற்றிற்று.

---

## சாலிகோத்திரச் சருக்கம்.

அறுகுணச் செல்வராகியும், பெரியோர்க்குப் பெருமானாகியும், உலகத்திற் கிறைவராகியும், நித்தமான உண்மைப் பொருளாகியும் இருக்கின்ற சிவபெருமான் றிருவருள்பெற்ற சூதமுனிவர் திருமுக மண்டலத்தை நோக்கிப் பிருகு, இடபன், ததீசி, அத்திரி, காசிபன், சுபேதன் வான்மீகி, சரபங்கன், சாபாலி, பரத்துவாசன், புலத்தியன் சுசீலன், நாரதன், மரீசி, சுகன், மார்க்கண்டன். சனகன், முற்கலன் ஆகிய முனிவர்கள் கேட்பாராயினர் சுவாமீ சிவராத்திரி விரதத்தினை யனுட்டித்து மறுமைப்பயனைப் பெறறோர் காதைகளை யிதுகாறுங் கூறினீர், இம்மைப் பலனைப்பெற்று வாழ்ந்தோரு முண்டோ அருள் புரிவீரெனலும், முனிவர் சொல்லுவார். கேளும் பற்றற்ற படிவத்தை வாய்ந்த பண்ணவரே? மேகமுகத்துப் பிரபைகுன்றாத சூரியனைப் போலவும், தீயின் முகத்தழியாத தங்கம்போலவும், பரசமயங்களின் முன்கெடாது எக்காளுமோரியன் பினதாய் விளங்கும் சைவ சமயத்தி னுண்மையுணர்ந்து வேதாகமங்கள் அறையும் முறையில் நின்ற சாலிகோத்திரனென்னும் பெயரினைவாய்ந்த வொரு பிராமணனுண்டு வேதமோதி அரிய கல்விக்கடலை கரைகண்டுணர்ந்த வாதியரையும் வென்று இயமநியமாதிகளில் சற்றும் பிழையாது வாழ்ந்து வந்தனன். இங்ஙனமாக ஊழ்வலியால் அவனது மனைவிமக்கள் சுற்றத்தார் முதலியோர் நாளுக்குநாள் மலிந்துவிட இலட்சுமி கடாட்ச

யின்றித் தரித்திரமுற்றனன். நம் பரமனருளிலாவானால் நாம் செய்வதென்னவென மனத்தெண்ணி, மாதுர்பாஷை யெனவழங்கும் வடமொழி மாதினுக்கு நாயகனாகிப் பிதுர்பாஷையெனப் பெயர்பூண்ட செந்தமிழை யீந்த செல்வனாகிய அகத்திய முனிவர்வாழும் இடந்தேடிச்செல்வோமென நடந்து பொதியமலையை யடைந்தனன், கடல்களேழினையும் குடங்கையிற்கொண்டு குடித்தகுறுமுனியை யவ்விடத்துக்கண்டு, ஐம்புலனைவென்ற ஐயரே பாம்பின்வாய்ப்பட்ட தேரையைப்போல் தரித்திரத்தால் துன்புற்றுநலிகின்றேன் அடியேனுய்யும்படி தேவரீருட்கண்சாத்தல் வேண்டுமென்றனன். அகத்தியர் சாலிகோத்திரனைப்பார்த்து அந்தணனே, அகிலத்திலுண்டாகுந் தீங்குகளையெல்லா மதமாக்குஞ் சிவராத்திரி விரதத்தினை நோற்பாயானால் நினது வறுமைக்கடலைத்தாண்டி ஆதிசேடனாலும் அளவிடுதற்கரிய அபாரமானச் செல்வத்தைப் பெற்றுப் பின்பு சிவசாம்பிராச்சியம் எய்தப்பெறுவாய் யென்றுரைத்து அச்சிவராத்திரிவிரதம் நோற்கும் பரிசினையும் கூறிப் பின்னுஞ்சொல்லுவார். ஓ பிராமணனே, தேவர்கள் வியக்கும் இவ்விரதத்தினை நல்ல தலங்களில் இயற்றில் ஒன்று கோடியாகிச் சிலநாளில் பெரும்பயனைக் கொடுக்கும். அத்தகைய உத்தமத்தலம் சொல்லுதும் கேட்பாய் சர்வமாங்கல்ய குணகண்மணி விக்கிரமாகி நம்பரசிவம் எழுந்தருளி யிருக்கும் வெதவன மென்று ஒன்று உளது. பலபிறப்புகளைவாய்ந்து அவற்றுள் செய்ததீவினையினால் பின்னும் சன்மங்களெடுத்து உழலும் பித்தர்களும் அந்தத்தலத்திலிறக்கப் பெற்றால் முத்தியடைவரெனி லதற்கிணையாகிய தலம் வேறுண்டோ, அவ்வாலயத்துச் சிவலிங்கப் பெருமான் முன்னிலையில் வன்னிமரமொன்றுண்டு அஃது சிவனடியார்கள் வினைகளைச்சுடும் * வன்னியென்றே சொல்லலாம். வேதநெறிதவறிய வேதியரும் செங்கோல் கோணிய அரசரும், நடைபிறழ்ந்த வணிகரும். மற்றச்சங்கரசாதியரும் அத்தலத்துக் கோடித்துறையிற் படிந்து, மணிகன்னிகையினு மூழ்கிச் சிவபெருமானை வணங்கச்சித்திபெற்று முத்தியுறுவர் என்று அருளினர். இவற்றைக்கேட்ட சாலிகோத்திரன் அங்ஙனமே மறைசைநகர்மேவி அவ்விடத்துப் புனிததீர்த்தங்களிற் படிந்து, கோயில் வலம்வந்து, முறையே கணேசகந்தர்களை வணங்கி நந்திபால் விடைபெற்று ஆலயத்துட் பிரவேசித்து அம்மையாரைக் கும்பிட்டு அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி, பெருங்கருணைத் தடங்கலாகிய பசுபதியை இதயத்தெண்ணிச் சிவராத்திரியில் சதுர்த்தசித்திதி

யில் மாதந்தோறும் அனுட்டித்து வில்வமுடன் சந்தனஞ்சாத்தினிவே தனம்புரிந்து பாடியாடி நவநவமாகச்சிவபூசை நாலுசாமத்திலு முடித்துவருநாளில் ஒருநாள் சிவபெருமான் கோடிசூரியர்கள் ஒருங்கே கலந்து உதயமானாற்போல அழகியதிருவுருவம் விளங்கவும், கங்கையையும், பிறையையுந் தரித்த முடியின்மேல் பண்களை நிகர்த்த இசைப்பாட்டை பாடாநின்ற வண்டுகள் பொருந்தும் கொன்றைமுதலிய மலர்களிருந்து விளங்கவும், சூரியன் சந்திரன் அக்கினி ஆகிய முச்சுடர்களும் முக்கண்ணுயமைந்து விளங்கவும் திருக்காதிலே குண்டலமும்தோடும் விளங்கவும், ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவம் ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவம் ஆகிய மூவகைத் துயரத்தையும் கெடுத்தருளும் இளமையான புன்சிரிப்புத் திருமுகத்தாமரையில் விளங்கவும், கொடியகடலில் நின்றெழுந்த ஆலாலவிடம் திருக்கண்டத்திலே சேர்ந்து விளங்கவும் திருக்கரத்திலே மானும், மழுவும், அடியார்களுடைய பிறவிப்பிணிநீங்க அமைத்த அபயமும், வாதமும் பொருந்தவும, திருநீற்றுக் காப்பினழகும், குங்குமத்தாலும் சந்தனத்தாலும் சமைத்த குளம்புதானே எனவிளங்கும், தாமரைமலரிலிருக்கும் பிரமனும் பாற்கடலில் பள்ளியமர்ந்த விஷ்ணுவும் ஆபுளிறுதியில் அழிந்துவிட அவர்களுடைய முழுவெலும்பாகிய மாலைகளும் கண்டிகைமாலைகளும் புயங்களிலே யணிந்த குவளைமலர்களோவென விளங்கவும், திரு அரையனிடத்தே புலித்தோல்விளங்கவும் வணங்குவோருடைய ஐம்புலன்களைத் தம்வசப்படுத்தி அவருள்ளத்தே அரியனவென்றெண்ணும் மேலான பலத்தைக்கொடுத்து எல்லாப்பாசங்களையும் கெடுத்து இருவினைகளை நீக்கியருளுமென்று இரப்பனபோல ஒலித்துப்பொலிந்து கால்களிலே வீரகண்டாமணி விளங்கவும, அடியார்களைப் பக்குவப்படுத்துந் தன்மையுடைய சத்தியாகிய பெருமாட்டியாரோடு தருமசோருபமாகிய இடபவாகனத்தின்மீது எழுந்தருளிக் காட்சிக்கொடுத்தனர். கண்ட சாலிகோத்திரன் ஆநந்தித்துப் பரவசமடைந்து கூத்தாடித் துதிக்கத் தொடங்கினன்.

"களக்கோலவல் விடமுண்டருள் களத்தாய்கவின் றருஞ்சா
மளக்கோமளத் திருமேனிகொண் மலைமாதின்மணாளா
தளக்கோகண தக்கண்ணினன் றருவேடனைச் சுடுதீக்
குளக்கோவுடைய யானேகுறிக் குங்கோவுடை யானே.

சுடுஞ்சூகரத் தடிமென்றுறு சுவைகண்டவை யுதவுங்
கடுங்கானவர் குலந்தோன்றிய கண்ணப்பனை யாண்டாய்
தொடுங்காய்கணை யெனமால்வரத் துன்னூர்புர முன்னா
ளடுங்கார்முகத் தானேயொரைந் தழகார்முகத் தானே.

சம்புக்கிளை கிளைபின்கிளை தானாய்வரு மீனார்
மொய்ம்புற்றிடு கொடிமன்னவன் முன்னேகொடு வந்தா
யம்புற்றநன் முடியாய்விற வரிதேடரு மருயாய்
கம்புக்குழை யானேகயக் கம்புக்குழை யானே.

நரக்குளிர்ப் புனல்வையைபி னிடியுங்கரை கொடியிற்
றாரச்சொரி மன்கூடை சுமந்தேயடி பட்டாய்
கோர்ச்சின மிக்காதிய கொக்கின்சிறை யக்கி
ளாரச்சடை யானேகினை யாரச்சடையானே.

கலைமாமறை யயனீஉறு கற்பந்தொறு நல்குந்
தலைமாலை புனைந்தாய்வட தருகீழ விருந்தாய்
கொலையார்கதி ராழிப்படை கொண்டேசலந் தரனை
மலைமாதிடத் தானேயிம மலைமாதிடத்தானே.

சிலுத்தாண்டனி லுதித்தோங்கிமண் டிகைத்தேஞ்சமுன்சிரித்தே
யுலைத்தாண்டுபொன் னிறத்தீயவ னுடற்கீண்டிடு மரியை
யலைத்தாங்குயிர் கொளச்சிம்புள தானாயி லார்முத்
தலைத்தானையி னானேபுலித் தலைத்தானையி னானே.

பணப்பாம்பரைப் பரவைக்குநம் பரவைப்பெரு விரக
மூணர்த்தாங்கென விடுஞ்சுந்தரற் கொருசந்து நடந்தாய்
மணப்பூந்துகள் குடைந்தூதிமை வரிவண்டிமிர் மதலைத்
துணர்ப்பூங்கணி யானேதொழுந் தொண்டர்க்கணி யானே.

சுதைக்கும்பரன் முலைமாதரைத் துகடீர்புவிச் சுரரை
வதைக்கும்பழி தனைமாற்றிடு மணிகன்னிகை யுடையாய்
பதைக்கும்படி யடலார்கொடும் பகடூர்சமன் மருமத்
துதைக்குங்கழ லானேகரத் தொளிர்பொங்கொழ லானே.

சலத்தான்கிகுவ் கொடியோனிசை தருவீணையின் கொடியோன்
புலத்தார்கரி யிருநான்குடன் பொருதன்றடல் புரியு
முலைத்தோடலை செரியட்டுரா னுட்கும்படி யூன்று
மலர்க்கானகத் தானேதிரு மறைக்கானகத்தானே.

துன்பந்தரு பிறவிப்பணி தொலையும்படி நிலையா
மன்பங்கிபி னிழுதிட்டென வகநெக்குரு கிப்பூ
நன்பங்கய நிகாநின்பத நாளுந்தொழு மடியார்க்
கின்பந்தரும் பித்தாவர மெனைநீவிரும் பித்தா."

என்று பலதுதிகூறி வீழ்ந்து எழுந்துதுள்ளியாடிக் கரங்கூப்பி முடியில்வைத்து நின்ற சாலிகோத்திரனைக் கடைக்கணித்துக் கருங் காலனை யுதைத்த செங்காலனாகிய சிவன் திருவாய்மலர்ந்தருளுவார். சாலிகோத்திரனே? இவ்வுலகில் இன்னும் சிற்சிலகாலம் மனைவி மக் கள் சூழப்போகமெல்லா மனுபவித்துப் பின்பு என்பால் வந்துசேர் வாயெனக் கட்டளையிட்டு மறைந்தருளினர். அன்றுமுதல் அவன் குபேரனைப்போல நிதிபல்பெற்று அஷ்ட ஐசுவரியங்களையு முற்று நெடுநாட்கழித்து வேதங்கள். சாத்திரங்கள் புராணங்கள் கலைஞா னங்கள் சமயசாத்திரங்கள் பலவும் விசாரித்துத் திரிபதார்த்த திரிப தார்த்த விளக்கமுணர இருவினையொப்பும், சத்திநிபாதமும், குரு வருளும் ஞானசாதனமும், மும்மலக்கழிவும், வாதனை நீக்கமும், ஞா னப் பெருக்கமும், முறையே உண்டாகப்பெற்று அழிந்தானுமில்லை யாய், சிவமுதலானானு மில்லையாய், சிவமுதலின்றிக்காரியப்பட்டானு மில்லையாய், சிவததுக்கு வேறாயிருந்தானுமில்லையாய் கேவலவிசிட்ட மறுதலை ஆபாசார்த்த விதங்களைக்கடந்து சிவத்தோடு சுத்தாத்வித நிலையினை யடைந்தனன்.

இச்சிவராத்திரிச் சரித்திரப் புத்தகத்தை வைத்துப் பூசிப்போ ரும், தரிசிப்போரும், படிப்போரும், கேட்போரும் இம்மைப்பய னோடு மறுமைப்பயனையும் பெறுவரென்பது காலத்திரயத்துஞ் சத் தியமென்று சூதமுனிவர்சொல்ல மற்றைய முனிவரனைவரும் கே ட்டுஉளமகிழ்ந்தனர்,

சாலிகோத்திரச்சருக்க முற்றிற்று.

---

## வாழி.

"வாழி மாதவர் வாழி மனுநெறி
வாழி மாநிலம் வாழிநல் லானினம
வாழி நான்மறை வாழி மழைமுகில்
வாழி வைதிக சைவ வழக்கமே."

## புராணசூசனை.

---

இப்புராணத்திற் குறிக்கப்பட்டிருக்கிற சுகுமாரன், அங்குலன் முதலியோர் கொலை, களவு, விபசாரமுதலிய செய்துஞ் சிவராத்திரியன்று சிவலிங்கப் பெருமானைத் தரிசித்து முத்திபெற்றனர். ஆகலின் நாமும் புலால்முதலிய இட்டப்படிப்புசித்து வாழ்ந்து சிவராத்திரி விரதமநுட்டிக்கின் முத்தியடையோமா, என்பர் சிலர் அந்தோ! அந்தோ!! இஃது மிக்க அறியாமை. தீமைசெய்தார் எக்காலத்துந் துன்பமே யுறுவர். நன்மைசெய்தார் எக்காத்தும் இன்பமே பெறுவர். சுகுமாரன், அங்குலன் முதலியோருடைய பூர்வ பிராரத்துவங்களின் அடைவையும், அவர்க ளடைந்த பதமுத்திகளின்பேதங்களையும் இத்தகையோருக்குச் சிவராத்திரி புண்ணியங்கிட்டிய தன்மையையும் ஆகிய விவற்றைச் சூக்குமமாக விசாரிக்கின் உண்மை விளங்கும்! விளங்கும்!! இப்புராணம் பத்திநூலாகலினாலும், வெகு சுருக்கநூலாகலினாலும் அத்தகைமைய நுண்ணிய விடயங்களை யிங்கு எடுத்துக் காட்டாது விடுத்தோம். உண்மை விரும்புவார் ஞானநூல்களாகிய சித்தாந்த சாத்திரங்களைச் சாம்பிரதாயமாய்க் கற்றுணர்ந்த சன்மார்க்கரை யடுத்துச் சந்தேக விபரீதமறத் தெரிந்துகொள்ளலாம். எக்காலத்தும்புலால் நீக்கி யிருத்தலே புண்ணியம். இது வேதாகமசாத்திரபுராண விதிகாசங்களின் சம்மதமென்பது சத்தியம்! சத்தியம்!!

## சிவராத்திரி புராணம்.

ஸம்பூர்ணம்.

---